உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி 6 | இரௌத்திரி ௵ மாசி ௴ ௧௳<br>1921௵ பிப்ரவரி ௴ 12௳ | பகுதி ௩ |

## கடவுள் வணக்கம்.

ஒன்றாகிப் பலவாகிப் பலவாக் கண்ட
வொளியாகி வெளியாகி யுருவு மாகி
நன்றாகித் தீதாகி மற்று மாகி
நாசமுட னுற்பத்தி நண்ணா தாகி
இன்றாகி நாளையுமாய் மேலு மான
வெந்தையே யெம்மானே யென்றென் றேங்கிக்
கன்றாகிக் கதறினர்க்குச் சேதா வாகிக்
கடிதினில்வந் தருள்கூறுங் கருணை விண்ணே.

வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்த
வான்பொருளே யெளியனேன் மனமா மாயைக்
குடிகெடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மோன
குருவேயென் றெய்வமே கோதி லாத
படியெனக்கா னந்தவெள்ளம் வந்து தேக்கும்
படியெனக்குன் றிருக்கருணை பற்று மாறே
அடியெடுத்தென் முடியிலின்னம் வைக்க வேண்டு
மடிமுடியொன் றில்லாத வகண்ட வாழ்வே.

திடமுறவே நின்னருளைச் சேர்த்தென்னைக் காத்தாளக்
கடனுனக்கென் றெண்ணிநின்னைக் கைகுவித்தோ னலனோ
வடைவுகெட்ட பாழ்மாயை யாழியிலே யின்னமல்லற்
படமுடியா தென்னாவிப் பற்றே பராபரமே.

ஆராமை கண்டிங் கருட்குருவாய் நீயொருகால்
வாராயோ வந்து வருத்தமெலாந் தீராயோ
பூராய மாகவருட் பூரணத்தி லண்டமுதற்
பாராதி வைத்த பதியே பராபரமே.

# ஆனந்தபோதினி

இரௌத்திரி௵ மாசிமீ ௧௨

## விதவா விவாகம் கற்புடைத்தா?

"விதவா விவாகம் கற்புடைத்தா?" என்று. நமது சந்தாநேயர்களில் இரண்டொருவர் நம்மை வினாவியிருக்கிறார்கள். இதைப் பற்றி ஆராய்ச்சி செய்யப் புகின் முன்னே 'கற்பு' என்பது என்ன என்பதை யறியவேண்டும். சுருக்கமாகக் கூறும் பட்சத்தில் 'தன் பர்த்தாவின்சொல்லுக்கு எவ்வகையினும் மாறுகூறாது, அவனையே தெய்வமாகக் கருதி அவனிடம் பூரண பக்தி விசுவாசத்தோடு நடந்து கொள்வதுதான், 'கற்பு' எனலாம். அத்தகைய கற்பு ஒரு பெண்ணுக்குத் தான் உயிருள்ளமட்டும் இருத்தல் வேண்டும் என்பது சொல்லாமலே யமையும்.

மேலும் அந்தப்பக்தி பரிசுத்தமானதாகவும், மாசில்லாத தாகவும் இருத்தல் வேண்டும். கற்பின் மகிமை அளவிடப்படாது. அது தெய்வீகத்தன்மையுடையது. ஆகையால் அது களங்கமற்ற பரிசுத்த உள்ளத்தில் பதியப்பட்டதாக விருந்தா லன்றிச் சரியான கற்பாகாது. கணவனிடத்தில் மட்டுமே அத்தகைய அன்பும் பக்தியும் இருக்கத்தக்கன.

"கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறோ
ரிற்புறத் தவரை நாடார் யாங்களு மின்ப வாழ்வுந்
தற்பொறி யாக நல்குந் தலைவனின் னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணா னந்த வாழ்வே'

என்றனர் தாயுமான சுவாமிகள்.

ஒரு மாது தன் கணவனை யன்றி வேறொருவனை இச்சையோடு கருதினும், நோக்கினும் அக்கற்பின் மகிமை குன்றியதாகும். இதற்கொரு திட்டாந்த முண்டு.

ஜமதக்னி முனிவருடைய பத்தினியும் இருபத்தொரு தலைமுறை க்ஷத்திரியர்களை யழிக்க முடன்ற பரசுராமரின் மாதாவுமாகிய இரேணுகாம்பாள் மிக்க கற்புடைய உத்தமி. அம்மாது தன்

கணவருடைய பூஜைக்காகக் கமண்டல நதிக்குச் சென்று தன் கற்பின் மகிமையால் குடமின்றியே நீரைக் கரங்களால் திரட்டி எடுத்து வருவது வழக்கமாக விருந்தது. இவ்வாறு பிரதி தினமும் நடந்து வருகையில், ஒரு நாள் ஜலத்திற்குச் சென்ற அம்மாது, ஆற்றில் நின்று ஜலத்தைத் திரட்டக் குனிந்தபோது வானத்தில் கமனம் செய்யும் ஒரு கந்தருவ புருடனுடைய பிரதி பிம்பம் அச் சலத்தில் தோன்றக்கண்டதும் அதைக்கண்ட அவ்வம்மை "ஆ! பிரதி பிம்பமே இவ்வளவு அழகாயிருக்கிறதே! அம்மனிதன் எவ்வளவு அழகுடையவனே!" என்று எண்ணிக்கொண்டே நிமிர்ந்து ககனத்தை நோக்கினுள். அதற்குள் கந்தருவன் தூரம் சென்ற படியால் புலப்படவில்லை. இரேணுகாம்பாள் பிறகு குனிந்து வழக்கம் போல் கரங்களால் ஜலத்தைத் திரட்ட முயன்ற போது எப்போதும் போல் ஜலம் குடத்தைப்போல் திரண்டு கைக்கு வரவில்லை. உடனே தன் கற்பிற்குப் பங்கம் நேர்ந்ததென்று உணர்ந்து நடு நடுங்கி நின்றனள் எனறு சரித்திரம் கூறப்பட்டிருக்கிறது. இதனால் கற்பு எத்தகைய பரிசுத்தமான மனதைப் பொருந்தியதென்பது விளங்கும்.

ஒரு மாது தன் கணவன் எதிரில் இருந்தாலும், இல்லாவிடினும், அவன் தேசாந்தரம் சென்றிருந்தாலும், எப்போதும் அவள் அவனிடத்தில் பதிந்த மனமுடையவளாகவே யிருக்கவேண்டும் அதுவே கற்பாகும். நமது சாத்திரங்களின் சித்தாந்தப்படி, இறந்தவர்களுடைய தூல தேகம் மட்டும் அழிகிறதே யன்றி அவர்கள் ஆன்மா வேறு தேகத்தோடு அன்னிய உலகத்தில் இருந்து கொண்டேயிருக்கிற தென்றும், நாம் அவர்களைப் பற்றிச் சிந்திப்பதை யவர்கள் உணர்வார்களென்றும், இங்கு நாம செய்யும் கர்மாதிக் கிரியைகளால் அவர்கள் ஒருவிதப்பலனை யடைகிறார்களென்றும் நம்பியே நாம் அவர்களுக்குப் பிதுர்க்கடன் செலுத்தி அவர்களைப் பிரார்த்திக்கிறோம்.

இவ்வா றிருக்கையில் கணவன் உயிரோடு இருக்கும்போது அவனைக் கடவுளாகவே பாவித்து வந்த ஒரு ஸ்திரீ, அவன் இறந்து போனபின் அவனை யின்னும் உறுதியோடு கடவுளாகப் பாவித்து பக்தி செலுத்தவேண்டியவ ளாகிறாள் என்பது நன்கு விளங்குகிறதன்றோ? ஒருவருக்குத் துரோகம் செய்வதெனின், அவர்கள் அறியும் வண்ணம் செய்யினும், அறியாவண்ணம் செய்யினும், அவர்கள் எதிரில் செய்யினும், மறைவில் செய்யினும், மனதால் சிந்திக்கினும் துரோகமே யாகும்.

கணவன் இறந்தபின் அவனை யின்னும் அதிகமாகவே தெய்வமெனப் பாவிக்க வேண்டிய மனைவி வேறு புருடனிடம் காதல் கொண்டால், அவள் எப்படி இறந்த தன் கணவனுக்குத் துரோகம்

செய்யாதவளாவாள்? முதலாவது, அவள் மனச்சாட்சி அப்படி நினைக்குமா? இல்லை. இரண்டாவது கணவனை மணம்புரியும்போது முதல் கணவன் மேலிருந்த அன்பும் அவனும் மறக்கப்படுகிறார்களோ? கணவன்மேல் உண்மையான அன்புவைத்திருந்தவர்கள் அனேகர் அவன் இறந்தபின் இன்னொருவனை மணம்புரிய மனதால் நினைக்கவும் மறுத்துவிடுகிறார்கள்.

இரண்டாவது கணவனை மணம் புரியும்போது, முதல் கணவன்மேல் கொண்டிருந்த அன்பின் நினைப்பிருக்கிறவரையில், அவள் பரிசுத்த உள்ளத்தோடு அவனைமணம்புரிகிறவளாவாளோ? அவள் இரண்டாவது கணவன்மேல் கொள்ளுங்காதல் சத்தியமும் பரிசுத்தமுமானதோ? ஏககாலத்தில் இரண்டு ஆடவர்மேல் பதிந்த மனமுடைய ஒருமாதிடம் கற்பு நிலைத்திருக்கிறது என்பது மனதிற்கு ஒவ்வாத விஷயமாகவே இருக்கிறது. துரோபதை ஐந்துபேரை மணந்துகொண்டும், பத்தினியென்று மதிக்கப்படுகிறாளே யெனின், விலக்கு எதிலுமுண்டு. அந்தயுகத்திற்கு அது ஒத்ததாக விருந்தது. யுகத்திற்கு யுகம் மனிதரின் மனோநிலைமை மாறுபடுகிறது. ஒரு யுகத்தில் நீதியாகக் கருதப்பட்டது மற்றொரு யுகத்தில் அநீதியாகக் கருதப்படுகிறது. கடந்த யுகங்களில் மறு விவாகம் செய்துகொள்ளும் வழக்கம் இருந்தபோதிலும், அப்போதிருந்த மனிதர் கபடமற்றவர்களாதலின், ஒருபுருடனை மணந்தால் அவன் இருக்கிறவரையிலாவது அவனைத் தெய்வமாகவே கருதி நடப்பார்கள். அன்னிய புருடனைக் கருதவு மாட்டார்கள். இக்காலத்திலோ மறு விவாகம் செய்துகொள்ளலாமென்று விதியிருந்தால், வேறு அதிக செல்வமுடைவனையாவது, அழகுடையவனை யாவது இச்சித்து அவனை இரண்டாவது கணவனாக வரிக்க வெண்ணங்கொண்டு, இருக்கும் கணவன் சீக்கிரம் மரிக்கவேண்டு மென்று பிரார்த்திப்பார்கள்.

மறு விவாக வழக்க மிருக்கும் நாடுகளில் இத்தகைய அக்கிரமங்கள் அனேகம் நடக்கின்றன வென்பது அனுபவம். அத்தகைய நாடுகளில் கூட ஒவ்வொரு ஸ்திரீ "இறந்த கணவனுடைய ஆன்மா பரலோகத்திலிருந்து என்னைப்பார்த்துக்கொண்டிருக்கிறது. அவன் நினைப்பும், அவன் மேல் வைத்த அன்பும் என் மனதை விட்டு நீங்கவில்லை. ஆதலின் நான் இன்னொரு புருடன் மேல் காதல் கொண்டால் அக்காதல் பரிசுத்தமான காதலாகாது. ஆகையால் நான் மறு விவாகம் செய்துகொள்ள மாட்டேன்" என்று கூறுகிறாள்.

இதனால் மறு விவாகம் செய்துகொண்ட பின் கற்பிருக்கிறதெனக் கூறுவது மனதிற் கொவ்வாததாகவேயிருக்கிறது.

---

ஓம் தத் ஸத்.

# ஓர் உண்மை.

நமது அன்பார்ந்த சந்தா நேயர்களுக்கு நாம் அறிவிக்க விரும்பும் விஷய மொன்றுளது:

ஹிந்துக்களுக்கு ஆன்மார்த்த விஷயம் மற்ற எல்லா விஷயங்களினும் சிறந்தது. ஆகவே உண்மை ஹிந்து எதை யிழக்கினும் தன் பிராணனிலும் சிறந்ததாக அவன் கருதும் தன் மதத்தை யிழக்க மட்டும் உடன்படான். இதனால் நாம் நமது சஞ்சிகையில் நமது மத விஷயத்தைப்பற்றியும் எழுதி வரவேண்டியது அவசியமாயிருக்கிறது. நமது மதத்தின் க்ஷேமத்தில் நமக்குக் கருத்தேயன்றி அன்னிய மதம் எதையும் தூஷிக்கவேண்டு மென்பது நமது நோக்கமேயல்ல. உண்மை யிவ்வாறிருக்க இரண்டொரு நண்பர்கள், நாம் கிருஸ்து மதத்தைத் தூஷிப்பதாகத் தவறான அபிப்பிராயங் கொள்கிறார்களென்பதையறிய நாம் விசனிக்கிறோம்.

எல்லா மதங்களும் கடவுளுக்குச் சம்மதமே என்பதும், எல்லா மதங்களாலும் பிரதிபாதிக்கப்படுவது ஒரு கடவுளே என்பதும், எம்மதத்தி லிருந்தாலும், ஞானத்தால் மோக்ஷ மடையலா மென்பதும் நமது கொள்கை யாதலின் நாம் எந்த மதத்தையும் தூஷிக்கக் காரணமில்லை. ஆனால் கிருஸ்து மத போதகர்களில் சிலர் தங்கள் மதத்தைப் பரவச் செய்ய எடுத்துக்கொள்ளும் முயற்சியின் நெறியைப்பற்றி நாம் கூறவேண்டியதாக நேர்கிறது. அவர்களைப்பற்றி மட்டும் ஏன் கூறவேண்டும்? மஹம்மதிய மதம் பௌத்த மதம் முதலிய மற்ற மதங்களைப்பற்றி மட்டும் ஏன் நாம் பிரஸதாபிப்பதில்லை? அதற்குத் தக்க காரண மிருக்கிறது.

ஒருவர் மேல் நாம் வலியச் சண்டைக்குச் செல்வது நியாயமாகாது. இன்னொருவர் நமமேல் வலியச் சண்டைக்கு வரும்போது நாமும் எதிர்த்து அவர்களை முறியடிக்க நியாயமிருக்கிறது. அப்படி யிருக்கத் தற்காப்பேனும் செய்து கொள்ளாதிருப்பது மனித சுபாவமாகுமோ? அல்லது அப்படிச் செய்வது எள்ளளவேனும் குற்றமாகுமோ?

கிருஸது மத போதகர்கள் நமது மதஸ்தர்களிடம் வலிய வந்து தங்கள் மதத்தைப்பற்றிப் போதிப்பதோடுஹிந்து மதத்தில் குற்றங்கூறி நம்மவர் தங்கள் மதத்தில் அவ நம்பிக்கை கொள்ளும் வண்ணம் செய்கிறார்கள். அதோடு போகாமல் தந்திரமான போதனைகளாலும் நமமவரைத் தங்கள் மதத்திற்கு இழுக்க முயல்கிறார்கள். இது பகிரங்கமாக நடைபெறும் போது நாம் நமது மதத்தைக் காத்துக்கொள்வதற்கு முயற்சி செய்யவேண்டியது நமது கடமை யன்றோ. ஒவ்வொரு ஹிந்துவும் தன் உயிரினும் சிறந்ததாக மதிக்கும் தன் ஒப்புயர்வற்ற மதத்தைக் காக்கக் கட-

மைப்பட்டவனாக விருக்கிறான். நாமோ அக்காரணத்தோடு நாம் மேற்கொண்டிருக்கும் பொது நல ஊழியமாகிய தொழிலினாலும் அப்படிச் செய்யக் கடமைப்பட்டிருக்கிறோம்.

ஆகையால் நம்மவருக்கு நாம் கீழ்க்கண்டவாறு கூறுகிறோம்:- "நமது மதம் அனாதியாயுள்ளது. ஆன்ம பரமான்ம இலக்ஷணங்களும் மோக்ஷ இலக்ஷணமும், மோக்ஷமார்க்கமும் நமது மதத்தில் விவரமாகக் கூறப்பட்டிருப்பது போல் வேறெதிலும் கூறப்பட்டிருக்கவில்லை. அன்னிய மதஸ்தரின் போதனைக்குச் செவி கொடாதீர்கள். சரியை கிரியை சம்பந்தமான விக்கிரகாராதனை முதலியவைகளைப்பற்றி அன்னியர் குற்றங்கூறினால் மயங்கி விடாதீர்கள். அவைகள் மோக்ஷத்திற்கு இன்றியமையாத ஞானத்தைப் பெறப் படிகள் போன்றவை. கடவுளை விக்ரக ரூபமாக வணங்குவது பாபம் என்று கருதுவது அறிவீனம். கடவுள் அதற்காகக் கோபிக்க மாட்டார். அவைகளைப்பற்றிய விவரமான காரணங்கள் நமது சாஸ்திரங்களில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றை வாசித்துணராமல் அன்னியர் கூறுவதைக் கேட்டுக் கலவரமடையாதீர்கள்.

அன்னியமதம் போதிக்கப்படும் பாடசாலையிலாவது, அன்னிய மத உபாத்தியாரிடமாவது நம்மக்களைக் கல்வி கற்க விடாதீர்கள். அன்னிய மத மாதர் நம் வீட்டிற்கு வந்து இலவசமாக நமது பெண் மக்களுக்குக் கல்வி போதிப்பதாகக் கூறினால் மூடத்தனமாக மயங்கி அதற்கு இணங்கி விடாதீர்கள். முதலில் நமது மக்களுக்குத் தாயப் பாஷையில் மதக்கல்வியைப் போதித்துப் பிறகு எந்தக் கல்வியேனும் கற்பிக்க முயலுங்கள்."

இவ்வாறு கூறுவதால், நடுநிலைமையாக உள்ள அறிவாளிகள் எவரும் நாம் அன்னிய மதத்தைத் தூஷிக்கிறோமென்றாவது, நாம் அப்படிக் கூறுவது தவறென்றாவது ஒரு போதும் கூறமாட்டார்கள். நமது சந்தாநேயர்கள் இதையுணருமாறு வேண்டிக்கொள்கிறோம். ஓம் தத் ஸத்.

---

## தன்வினை தன்னைச்சுடும்.

(176-ம் பக்கத்தொடர்ச்சி.)

பொது வகையாற் றீவினைக ளெனக் கருதப்படுபவை:—பொய்யுரையாடல், புறங்கூறல், கொலைபுரிதல், செய்ந்நன்றி கோறல், தீயாரோடிணங்கல், பிறர்மனை நயத்தல், கள்ளல், கள்ளுண்ணல், கவறாடல் முதலாயினவாம். இத்தியாதி தீவினைகளா லுண்டாம் தீமைகளைப் பற்றியே நுவலும் எல்லா நூல்களும். பிறர்மனை நயப்போன் ராமாயண பாராயணத்தால் பெறும் பயன்யாது? 'படிப்பது திருவாய்மொழி, இடிப்பது பெருமாள் கோயிலா? காசிக்குப் போனாலும் தன் கன்மம் தன்னோடே. வழி

யோர் வயிறெரிந்து வருந்தும்படி அவர்தஞ் செல்வமெல்லாம் அபகரித்து அன்னதானஞ்செய்வோன் அருநிரயத் தாழா தொழிவன்கொல்? ஒரு பொய்யுரைத்த காரணத்தால் கொடு நரகத்தைக் காண்டலாகிய துன்பத்தை யுதிஷ்டிரரும் துய்த்தே தீர்த்தன ரென்னின், நாளொன்றுக் கெண்ணிலாப்பொய் புகல்வோர் கதி யாதாம். நல்வினையாற் றீவினை நசிக்குமோ? இன்ப மிம்மியாத் துன்பந் தூணாத் தோன்றுமன்றே துய்க்குங்கால்? பட்டினத்தடிகள்,

"ஒன்றென் றிருதெய்வ முண்டென் றிருஉயர் செல்வ மெல்லாம்
அன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல் லறமு நட்பும்
நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்ட படி
என்றென் றிருமன மேஉனக் கேயுப தேச மிதே."

எனத் தன் மனத்தினுக் குபதேசம் செய்துள்ளதை யுய்த்து ஆராயின் தக்கவை யின்ன தகாதன வின்னெனத் தெள்ளிதிற் புலனாம். 'உட்சுவருட்புறுக்கப் புறஞ்சுவர்க்குக் கோலஞ் செய்யுமாப்' போல், அகத்தூய்மையின்றி யாக்கையைக் கழுவல், தலையை முண்டித்துச் சந்யாசமடைதல், காவடி தூக்கிக் கங்கா யாத்திரை போதல், மலைமேலேறி மாவிளக்குப் போடுதலாதிய கிரியைகள் மட்டும் என்ன பயனுடைத்தாம்?

"மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின்."
"அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்!"

எனப்பலவாறு நந்தாத் தமிழ் மறை நவில்வதை நாடி, பொல்லாங் கென்பவை யெல்லாந் தவிர்த்து நடத்தலே யெவர்க்குங் கடப்பாடாகும். இன்றேல் மானுடம் மாண்புடைத் தாகா.

மக்களே மாக்களின் மாண்புடையாரென மானிடராவா ரனைவருமறைவ ராயினும், அவ்வா றுவதன் காரணம் இற்றென வறிவோர் மிகச் சிலராவர். "மற்றொன்று விரித்தல்" என்னுங் குற்றமாமென்று கற்றறிந்தோர்கள் கழறுவராயினும் ஈண்டைக் கின்றியமையா வியல்பினை நோக்கி அதனையுஞ் சிறிது ஆராய்வாம்.

விலங்கு புள்ளாதிகட் கில்லாத ஆன்மாவை யுடைத்தாயிருத்தலின் மனிதன் சிறந்தவனென்பர் சிலசாரார். பகுத்தறிவுடைமையிற் பண்புடைத்தாமெனப் பகராநிற்பர் மற்றொரு சாரார். இவற்றுள் முதலாவது மறுக்கப்படும்; (ஏனெனில், மனிதனுக்கிருப்பது போன்ற ஆன்மாவே விலங்கு புள்ளாதிகளுக்கு முண்டு, ஆனால் அறிவு விளக்கத்தில் அவை மனிதனிலும் குறைந்தவை. இதைவிட்டு அவற்றிற்கு ஆன்மா இல்லையெனக் கருதுவது ஆன்மலக்ஷண மறியார் கூற்றென்க. ப-ர்) மற்றொன்று முற்றிலும் மறுக்கப்படாத தாயினும், அவைகளும் தத்தமக்கேற்ற குணங்களையும், சாதாரணப் பகுத்தறிவையும் இயற்கையாகவே கடவுளருளால் பெற்றுள்ளன வென்பது உணரத்தக்கது. உழுவை யுயிர்க் கொலைக்கஞ்சி யூனுண்ணலை யொழிக்கின் உயிர்வாழாது. வேழம் மறமெனக் கருதியோ சாகத்தைப் பக்ஷிக்கின்றது? இலை யாவும்

அவற்றின் பிரகிருதியாகும். கங்குலிற் கூகை கனத் துலாவலும், சேவல் வைகறையிற் றுயிலுணர்ந் தெழுதலும், காக முற்றுருடன் கலந் துறவாடலும் இயற்கை. மனிதனொருவனே செயற்கைக் கென்று விடப்பட் டிருக்கிறான். சீதோஷ்ண மாறுதலால் நிர்வகிக்க வியலாது விலங்கினம் மரிக்க, மனிதன் மாத்திரம் சகல சௌகரியங்களும் செய்துகொண்டு உயிர்வாழ வல்லனாகிறான். சீதளமிகுந்த தேயத்தின்க ணுள்ள ஓர் விருக்ஷத்தையேனும் ஒரு பறவையையேனும் உஷ்ணதேசத்தி லுய்ப்போமாயின் அவை இறந்தொழியும். இன்னும் பசு பக்ஷியாதிகட்கு இவைகளால் நன்மையுண்டாகும், இவைகளால் தீமையுண்டாகும், இவரு றவர், இவர்பகைஞர் என்ன இத்யாதிபகுத்தறிவு இயற்கையாகவே உண்டு. ஆனால் மனித னெதனால் உயர்ந்தவனாகிறானெனின்.பகுத்தறிவென்னும் பொருளதாய், மனத்திற்குப் புறம்பே நின்று அதன் தொழில்களுக்கெல் லாம் சாக்ஷிமாத்திரமா யிருப்பதாய், அக்காரணத்தால் சாட்சியென்னும் பெயர்த்தாய், மனம் ஓர்தீமையைச் செய்ய நினைக்கும்போது "சே, சே, என்ன அறியாமை இது பாவமல்லவா?" என்றறிவுறுத்துவதாயுள்ள மனச் சாட்சியென்று கூறப்படும் ஒரு பொருளைப் பெற்றிருப்பதானேயாம்.இஃ தியாவரிடத்தும் பொருந்தியுளது. ஆயினும் அநேகர் அத்தகைய பொரு ளொன் றிருப்பதாகவே உணராது மனம் செல்லுமிடமெல்லாந் திரிந்து, தாம் வேறு மனம் வேறு என்பதையு மறியாது அஞ்ஞான அந்தகாரத்தில் அழுந்திக் கிடக்கின்றதாலேயே அநேக அக்கிரமங்களைச் செய்யநேரிடு கிறது. அச்சாக்ஷியின் சேர்க்கையால் மனம் தூய்மை யடையும். ஆகை யால் எக்காரியத்தையும் செய்யத் துணியுமுன் அம்மனச் சாட்சியுடன் ஆராய்ந்து செய்யின், தீவினையி னின்றும் பிழைக்கலாம். இதையே பொதுமறையும்.

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு" என

நிகழ்த்துகின்றது. அதன்படி நடப்போர் உலக நிந்தைக்காவது, சிறை வாச முதலிய எவ்வகைத் துன்பத்திற்காவது அஞ்சார். மேலும் அது கட வுட்டன்மை வாய்ந்ததாகலின் யாவர் மாட்டும் ஒரு படித்தாகவே யிருப் பது. மனச் சாட்சியின்படி ஒருவரால் செய்யப்பட்ட ஒரு செய்கை அவ் வாறே ஆலோசிக்கும் அனைவரும் ஒப்பத்தகுந்ததாகும். ஆகலின் தீய புரிவோரும் "எம் மனச்சாட்சி இவ்வாறு கூறிற்று;" என்பது ஒப்பத் தகாதென்க.

இவ்வாற்றால் மனச் சாட்சியை யுடைத்தாயிருத்தலே மக்களினுயர் ச்சிக்குக் காரணம் என்பது பெறப்படுகிறது. இதனால் மனிதராவா ரனை வரும் இம்மை மறுமை, புண்ணிய பாபமுண்டென்பதை யறிந்து தீயதை விலக்கி நன்மை கடைப்பிடித் தொழுக வேண்டியவ ராவர். இதுவே மானிடப்பிரகிருதி. இல்லையானால் தம்மொழுக்கத்திற் றவறாத விலங்கி னும், தம்மொழுக்கத்திற் றவறிய மானுடர் தாழ்ந்தவராகக் கருதப்படுவ துண்மை. தகாத காரியஞ் செய்தானைப் பார்த்தோன், "நீ மாடா மனி தனா?" என்கிறான். மனச்சாட்சியோடு ஆலோசித்து ஒரு காரியத்தைச் செய்ய வேண்டியவன், அவ்வாறு செய்யமுடியாத மாட்டைப்போல

ஆலோசியாம லியற்றினமையின் அதன்பிரகிருதியை யடைந்தா னென்பது இதனால் விசதமாகின்றது.

"தக்க வின்ன தகாதன வின்னவென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள
மக்களும் விலங்கே மனுவின் னெறி
புக்கவே லவ்வி லங்கும் புத்தேளிரே" (கம்பராமாயணம்)

(இ-ள்) செய்வன தவிர்வன அறியாத மனிதர்கள் விலங்குகளுக்கொப்பாவார்; விலங்குகளே யாயினும் அவற்றை யறிந்தொழுகு மாயின் தேவரை யொக்கும் என்பதாம். நிற்க,

வினை தன்னைக் கொண்டவன் நிற்கும்போதும், நடக்கும்போதும், படுக்கும்போதும் நிழலைப்போல நின்று வருத்தும். மறுமையின் மட்டுமன்று: இம்மை யினுமெய்து மென்பது நூல்களின் றுணிபு.

"இப்பவ மதனி லீட்டு மிருவினைப் பயன ளித்தல்
எப்பவத் தென்று மைய மிதயமே யெண்ண னன்றே
ஒப்புற விதை தெளித்தா லுடன்பல னளித்தல் போல
இப்பவ மீட்டு பாவ மிம்மையே யளிக்கு மன்றே."(ஆத்மபோத.

"தான் சாக மருந்துண்பா ரிலர்" என்னும் மூதுரை தான் கெடுவதாகிய சாக்காட்டின் பொருட்டு வினையாகிய மருந்துண்பா ருண்மையின், பழுதுபடுவதாகின்றது. செய்யும்போ தின்பமாய்த் துன்பம் பயக்கும் தீவினை புரியின், 'தன்வினையே தன்னைச்சுடும்.' துன்பந் துய்க்குங்கால் துயருறுவதால் யாது பயன்? 'செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால், எய்த வருமோ விருநிதியம்' ஆகலின், தானே தனக்குப் பகைவனும் நட்டானும் என்றபடி, தனக்குத்தானே யானை தன் தலையில் தானே மண்ணைவாரிப் போட்டுக்கொள்வது போல, துன்ப சாகரத்தி லழுந்தாது நல்வினையாகிய பலகைகளால் பிணைக்கப்பட்ட,இறைவனது திருவடிகளாகிய தெப்பமேறித், தியானமென்னுந் துடுப்பைக்கொண்டு செலுத்தி, இன்பமென்னும் கரையை யெய்த முயலுவோமாக. ஆண்டவ னருள் புரிவான்.

"தன்வினை தன்னைச்சுடும்," என்னும் மூதுரைக்கு, தீவினையைப் போலவே நல்வினையும் துன்பத்திற் கேதுவென்றும், "இருள்சே ரிருவினையும் சேரா" வென்றும், "இக்கரை யந்திரத் துட்பட்ட தென்ன, விருவினையுள் புக்கரைமா நொடியும் தரியாதுழல் புன்பிறப்பு" என்றும் கூறி யாங்கு, நல்வினையுள்ள வரைக்குந் தேவ போகந்துய்த்து, அது நீங்கிய வளவில் துன்பந்துய்க்கப் பிறவியடைதல் வேண்டுமாகையால், பிணிக்கும் விஷயத்தில் இருப்புத்தளையும் பொற்றளையும் ஒரே தன்மையுடையன வென்றும், வேறொரு பொருளு முரைக்கப்படும். அதிகாரி பேதநோக்கி யீண்டு விரிக்கப்பட வில்லை. உலகம் பிழைபொறுக்க.

"புண்ணியமாம் பாவம்போம் போனநாட் செய்தவவை
மண்ணிற் பிறந்தார்க்கு வைத்தபொருள்—எண்ணுங்கால்
ஈதொழிய வேறில்லை எச்சமயத் தார்சொல்லும்
தீதொழிய நன்மை செயல்."

பூ. ஸ்ரீநிவாஸன்,
தமிழ்ப் பண்டிதர், இராணிப்பேட்டை.

## . உளம் போல் உலகம்.

இவ்வுலகின் இயற்கைத் தோற்றங்களில் உண்டாகும் வெறுப்பு விருப்பும், நன்மை தீமை, பாப புண்ணியம் என்கிறவைகளைப் பகுத்தறிவதும், மனிதரின் மனத்திற்கேற்ப மாறுபடுகின்றன.

ஒருவன் உளம் எத்தகையதாய்ப் பயிற்சி செய்யப்பட்டுள்ளதோ அம்மாதிரியே அவன் உலகத்தினரையும் மதிக்கிறான் என்பது காளிதாசன் உளம் என்றும் ஆட்டு மந்தையிடம் பழகியதின் பலனாக, அம்பிகை யருள் கிட்டுமுன் ராஜ குமாரத்தி ஆவலாய் அளித்த தாம்பூலத்தையும், பன்னீரையும் ஆட்டின் எச்சம், மூத்திரம் என்று நிராகரித்ததால் தெரிகிறதன்றோ ?

ஒரு தவயோகி ஒரு நகரின் வெளிப்புறம் சாலையோரம் ஒரு விருக்ஷத்தின் அடியில் சயனித்தவண்ணம் நிஷ்டை புரிவதைக் கண்ணுற்று, அவ்வழியினூடே சென்ற ஒரு மதுபானப்பிரியன் தள்ளாடித் தட்டுத் தடுமாறி உளறியதாவது:“டேயப்பா!நானே நாலு மொந்தை என்னு இவன் எத்தனை போட்டானோ சாமி, சரியா சவமாட்ட சாஞ்சி னிக்கிறான்” என்றான். பிறகு அவ்வழியே சென்ற ஒரு கள்வன் “நம்மைப்போல் நல்ல பதுங்கி படுத்துக்கினுயிருக்கிறான். நல்ல கைக்காரனுட்டங்கீது” என்று நினைத்துக்கொண்டே ஏகினன். பின், ஒரு ஞானி அந்நேரம் நகரப்பிரவேசம் செய்யவரவும், யாரோ மனிதன் விழுந்துளனென்ற பச்சாதாபத்தால் அணுகி, அவர் அடயோகி என உணர்ந்து, அடி பணிந்தேகினன். இக்கதையில் அ: ரவர் உளத்தின் உணர்ச்சியை நோக்கின் உளம்போல் உலகம் தோற்றம் என்பது கண் கூடாம்.

தருமபுத்திரரையும், சுயோதனனையும் விளித்து, ஸ்ரீயப்பதியாகிய கிருஷ்ண பரமாத்மாவானவர், முறையே “நீங்கள் உங்கள் தேசத்தில் சஞ்சாரஞ்செய்தாராய்ந்து, கெட்டமனிதர் பத்துப்பேர்களையும், நல்லவர்கள் பத்துப் பேர்களையும் அழைத்து வாருங்கள்” என்றாக்கியாபித்தார். யுதிஷ்டிர பூபதி உலகெலாம் திரிந்து மெய்சோர்ந்து காலியாய்க் கண்ணபிரான் முன்வந்து, ‘‘ஐயனே! உலகில் உண்மையாய் ஆராய்ந்ததில் கெட்டவர்கள் என்று யாரையும் உரைக்க உளம் துணியவில்லை. பொய், கொலை, களவு,காமம், மதுபானமாகிய தீச்செயல் புரிவோனும், உண்மையில் குற்றவாளியாகத் தோற்றப்படவில்லை. ஏனெனில் அவர்கள் அஞ்ஞானத்திற் பட்டுத் தத்தளிக்கும் பேதைகள். உண்மை ஞானம் உண்டாக்குவது நம் கடமை. பஞ்ச மகா பாதகங்கள், மித்ர பிராதிரு துரோகங்கள் உண்மையாகிய ஞானக் கண் திறக்கப்பட்டால் நேரா; பாமர ஜனங்கள் இழிசெயலை இயற்றுகிறார்கள். ஆகையால், கடமையைச் செய்யாது அரச வம்சத்தி லுதித்த நானே குற்றவாளி” என்று கூறிக் கைகூப்பி நின்றார்.

வணங்கா முடிபடைத்த அரவக்கொடித் துரியோதனனோ கண்ணன் அந்தரங்கமாய் நல்லமனிதர் பத்துப்பேரைத் தேடிகொண்டுவந்தால் அவர்களுதவியா லியற்றும் யாகத்தால் பஞ்சவரை யழிக்கலாம் என்று கூறியதை முற்றிலும் நம்பி, துரோக அவா பிடர்பிடித்துந்த வெகு சிரமப்பட்டுத் தேசமெங்கும் தேடிக் கடைசியில் தன்னெண்ணம் பலிக்கவில்லை

என விசனித்து, கபட நாடகதாரியாகிய கார்வண்ணன் முன் நின்று "சுவாமி! உலகில் குற்ற மற்றவனே கிடையாது. எவ்வளவு நல்லவன் என்று உலகம் உரைத்தவனை நாடி விசாரிக்கின், கடைசியில் அவனிடமும் குற்றங்கள் காணப்படுகின்றன" என்றானும். நேயர்களே! கவனியுமின்! ஒரு விஷயம் நல்லதோ அல்லது கெட்டதோ என்பது அவரவர் மனோ நிலைமையைப் பொறுத்ததாகும். அவரவர் வாக்கின் நிகழ்ச்சியால் அவரவர் குணகுணங்களை அறிகின்றனர் அறிஞர்.

"மனத்த கறுப்பெனி னல்ல செயினும்
அனைத்தவையுந் தீயவே யாகும்—எனைத்துணையும்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர்" (நீதிநெறி விளக்கம்.) என்ற

குமரகுருபர தேசிகர் வாக்குப்படி மாசற்ற உளத்தினருக்குத் தீயசெயல்களும், நற்கருமமாகத் தோற்றும். துவேஷ சித்தர்களுக்கு நற்கருமம் தீச்செயலாய்ப் பிரதி பலிப்பது தங்கள் "உளம் போல் உலகம்" என்ற கூற்றாயிற்றன்றோ !

"சர்வவியாபி"யில் சங்கையின்றி வரைந்த ஸ்ரீமாஸ்கரின்ஹாஸ் உளமும், சர்வவியாபி ஆசிரியரின் மனமும் மேற்படி செய்யுளின் முதலடிக்கு உவமையன்றோ ! கண்மூடிப் பால் பருகும் பூனையாய் வரைந்துள்ள சர்வவியாபி பிரசுரம் கண்ட பெரும்பாலர் 'ஆனந்தன்' சந்தா நேயர் யாவரும் சற்று சிரித்து அறியாமையின் கூற்றெனத் தருமரின் மனநிலையை அடைவர் என்பது நம் கொள்கை. "இனிய உளவாக இன்னாத கூறல் கனியிருக்கக் காய் கவர்ந்தற்று" என்பதை, குற்றங் கூறும் குணவான்கள் மறுமுறை சிந்திக்கவேண்டிய தாவசியகம். இன்றேல் வீண் கால விரயம், சிரம நஷ்டம், இருதிறத்தின் அமைதிகுறைவு, ஒற்றுமைக்கு பங்கம் இவை நேரும். அருட் பெருஞ் செல்வன் அறிவை வளர்த்து அடியாரை ஆள்வானாக.

தா. கிருஷ்ணசாமி ஆசிரியன்,
போர்டு பாடசாலை, குரும்பேரி,
திருப்பத்தூர்.

---

## நம் தாய் நாட்டின் சிறப்பு.

(222-ம் பக்கத் தொடர்ச்சி.)

இராஜாங்க முறைமையைப்பற்றிய நூல்களில் இந்து இராஜ தந்திரிகள் இராஜாங்க மாறுதலைப்பற்றிய கோட்பாடுகளைக் கூடப் போதித்திருக்கிறார்கள். ஒரு அரசன் நெறி தவறி நடப்பானாயின் அவனை நீக்கிவிட்டு வேறு அரசனை ஏற்படுத்தவேண்டியது கிரமமான நீதியே யாகும் என்று விதித்திருக்கிறார்கள். அரசன் சட்டத்திற்கு மீறியவனல்லவென்று மநு முதலிய சட்ட ஸ்தாபகர்கள் அய்யமறக் கூறியிருக்கிறார்கள். ஒரு அரசன் சட்டத்திற்கும், நீதிக்கும் மீறி நடந்து குடிகளைக் கொடுமையாக நடத்துவானாயின், அவன் குடிகள் அவனைப் பட்டத்தினின்றும் விலக்கிவிட, வேண்டும் என்று விதித்திருக்கிறார்கள்.

இராஜாங்க முறைமையைப்பற்றிய இப்போதனைகள் ஏட்டில் மட்டும் எழுதப்பட்டவைகளாக இருந்துவிடவில்லை. அவை அனுபவத்திலேயே கொண்டுவரப்பட்டிருக்கின்றன. அபாத்திரரான அரசர்களும், உத்தியோகஸ்தர்களும் தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டார்களென்பதற்குப் பல திருட்டாந்தங்கள் இந்து சரித்திரத்தில் காணலாம். "பகுஜன வாக்கியம் கர்த்தவ்வியம்" என்பது இந்துக்களின் சித்தாந்தம்.

பிரஜாபத்திய துரைத்தன முறைமை கூட இந்தியாவில் நன்கறியப்பட்டேயிருந்தது. மிக்க பூர்வீக காலத்திலேயே பிரஜாபத்திய நாடுகள் இந்தியாவில் உண்டாகியிருந்தன. கிருஸ்து பிறக்க நான்கு நூற்றூண்டுகளுக்கு முன்பு வரை இத்தகைய நாடுகளில் சில, பூரணமான, அல்லது மாறுதலடைந்த சுயாதீனத்தோடு இருந்து கொண்டிருந்தனவென்று இந்து தேச சரித்திரக்காரராகிய ஸ்ரீமான் B. K. ஸர்கார் என்பவர் நிரூபித்திருக்கிறூர். இவற்றைப்பற்றி பௌத்தமத, ஜயின மத சம்பந்தமான சாசனங்களில் கூறப்பட்டிருப்பதோடு, இந்தியாவைப் பற்றி வரையப்பட்ட கிரீக் லாட்டின் நூல்களிலும் சம்ஸ்கிருத காவியங்களிலும், இராஜாங்க முறைமையைப்பற்றிய நூல்களிலும் கூறப்பட்டிருக்கின்றன. கி. மு. 326-ம் ஆண்டு மகா அலக்ஸாண்டர் இந்தியாவின் மீது படையெடுத்து வந்தபோது அவர் பாஞ்சாலம், ஸிந்து இவ்விடங்களிலிருந்த பிரஜாபத்திய சைனியங்களோடு போராட நேர்ந்தது. இந்த பிரஜாபத்திய நாடுகள் என்னவாயினவென்று கேட்கலாகும். அதற்கு விடையளிப்பது கஷ்டமல்ல. மாஸிடோனிய இராஜ்ஜியத்தால் கிரேக்க பிரஜாபத்திய நாடுகள் எப்படி விழுங்கப்பட்டனவோ அவ்வாறே இந்து பிரஜாபத்தியங்கள் பெரிய இந்திய இராஜாங்கத்தால் விழுங்கப்பட்டன.

முடிவில், நம் தாய் நாடு உலகத்திற்கு எவ்வளவோ பேருதவிகளைச் செய்திருக்கிறது.

பூர்வீகமாகவே எல்லா விஷயங்களிலும் மேன்மை பெற்றிருந்த நம் தாய் நாடு இப்போது இத்தகையசீர்கேடடைந்திருக்கிறது என்பதை மனதில் வைத்து நாம் ஒவ்வொருவரும் நம் தாய் நாடு பூர்வீக உன்னத நிலைமையை யடையவேண்டியதற்கு நம்மால் கூடியவரையில் உழைக்கும்படி எல்லாம் வல்ல பரம்பொருள் நமக்குப் பூரண அருள்புரியப் பிரார்த்திக்கிறேம்.

ஓர் இந்தியன்.

---

## கல்வியின் போக்கு

கண் மூடித்தனமாய் 'கொக்குக்கு ஒரேவழி' என்ற பழமொழிக்கிணங்க நடைபெற்ற கல்விமுறையிலிருந்து, சுவாதந்தரியமும், சுயேச்சையும், விசால வீக்ஷண்யமும் உள்ள நவீன கல்வி முறைக்குச் செல்வதென்றால், ஒரு பெரிய ஆரவாரம் நடந்திருக்க வேண்டும் என்பது வெளிப்படை. முக்கியமாய் அதன்பிறகு உறுத்தலான ஒரு நோக்கமிருப்பின், கல்வியின் முன்னேற்றம் தடைபடாது என்பதற்கு நாளடைவில் தக்க சான்றுகள் ஏற்படும்.

மஹா கவியான நவீந்தரநாத டாகூருடைய "போல்பூர்" கலாசாலையை இந்திய கல்லூரிகளுக்கு எல்லாம் ஒரு வழிகாட்டி எனவே கூறவேண்டும். எது எப்படி யிருந்தபோதிலும், கல்விக்கும் ஆத்ம தத்வ நூலுக்கும் விசேஷ சம்பந்தம் இருக்கிறதென்று மென்மேலும் அங்கீகாரமாகி வருகிறது. கல்வி நிபுணராகிய, ஸமைகேல் ஸாட்லரும் இதைத்தான் விசேஷமாகக் கூறுகின்றார். இனி, போல்பூர் பள்ளிக்கூடத்தைப்போல் கல்லூரிகள் ஏற்படக்கூடும்.

மேல்நாட்டிலும் ஆரம்பப் பள்ளிக்கூடங்களுக்கு, தலைமை உபாத்தியாயரது ரிகார்டுகள் முதலியவை, வைப்பதற்கு மாத்திரம் கட்டிடம் தேவையென்பதும், மற்ற வேலைகள் பரிசுத்தமான காற்றுள்ள இடங்களிலேயே நடப்பது உசிதம் என்பதுமாகிய கொள்கை மென்மேலும் முன்னேற்ற மடைந்து வருகிறது. ஏனெனில், ஆரம்பக் கல்வி விஷயத்தில் துன்ப முறுத்துவதே அறியாத இளைஞர்கள் பரிசுத்தமான ஆகாயத்தில் (Open air system) படிப்பதுதான் வெகு இயல்பு.

இங்குதான் கடவுள் விஷயமே அறியாத நமது கல்விமுறைச் சீர்திருத்த மிருக்கிறது. நல்ல மனிதர்களிடமிருந்து மறுதளிப்புகள் வரக்கூடிய கட்டாயமான கல்வி முறையே யிப்போ துள்ளது; ஏனெனில், கடவுள் விஷயம் வேண்டும் என்ற வாய்ப்பேச்சுக்கூட இதிலில்லை; 30 மணியுள்ள ஒரு வாரத்தில் 30 நிமிஷநேரம் போதிக்கக் கூடிய மதக்கல்வி தானுமில்லை; ஆனால் நமது புராதனமான "குருகுல" முறையில்தான் அதற்கு மார்க்க மிருக்கிறது.

இப்படிக் காற்று வீசவேண்டி யிருக்கையில், நம் மாகாணத்தில் சில அடிப்படையான மாறுதல் அடையவேண்டி யிருக்கிறது. 'கட்டாய ஆரம்பக்கல்வி மசோதாவில் நடப்பில் கலகாஸ்பதமாய் விளையக்கூடிய சில ஷராக்கள் எடுபடவேண்டும். ஏனெனில், கட்டாய மதக்கல்வியில் இஷ்டமில்லாவிட்டால் புதுப் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கப்படும் என்பது சட்ட பூர்வமாய் ஆக்ஷேபனைக்கிட மில்லாத தாயினும், நடப்பில் விஷயங்கள் உண்டாக்கக் கூடியது. எல்லாவற்றிற்கும் நமது குடியானவர்கள் எக்கோயிலுக்குப் போயினும், அவர்களது ஐயனாரையும் எசக்கி யம்மனையுமே தொழுகின்றனர். அதுவும் நமது மதத்தின் ஒரு பாக்கியமே.

உபயோகமற்ற மேனாட்டு முறைகளைக் கண் மூடித்தனமாய்ப் பின்பற்றுதல் மனுஷ்யகுண மன்று. இது, "நாட்டுவழக்கங்கள்" என்ற அடிஸன் துரையது வியாஸ மூலமாய் எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. இது நிற்க, ஒரு புது முறையில் சுமார் 10 வருஷங்களுக்குமேல் பயின்ற பிறகு, பழைய "மெட்ரிகுலேஷன்" அருகில்தான் வந்துகொண் டிருக்கிறார்கள். நமது போர்டார்களோ, இப்பொழுதுதான் மேனாடுகளில் தள்ளப்பட்ட முறைகளில் பள்ளிக்கூடங்கள் கட்டி வருகிறார்கள். இதற்கு முக்கிய காரணம் நமது தேசத்தில் மேனாடுகளின் பிரதிபிம்பம் ஸ்தாபனம் செய்வதிலேயே முயற்சியை வீணாக்கப் பட்டதுதான்.

ஒவ்வொரு இடத்தின் அவசியத்திற்கு ஏற்றவாறு (Local Needs) பாட ஜாப்தா பின்பற்றப்பட வேண்டும். இந்த நியாயத்தை ஒட்டி, எல்லாப் பள்ளிக்கூடங்களுக்கும் ஒரே விதமான பாடஜாப்தா வரைவது அவ்

வளவு உசிதமில்லை. அதாவது, நம் நவீன முறையில், இக்கோடுகளுக்குள் ளடங்கிய பாடமுறை (Fabular Statements) பொருந்தவே பொருந் தாது. ஒவ்வொரு பருவமும் (Season) வெவ்வேறு பாட முறைகளுக்கு உசிதமானது என்ற கொள்கை அங்கீகாரமானால் நலமே. மாணவர்கள் படித்துக்கொண் டிருக்கையில், இனிய கோகிலம் பாட, போல்பூரில், எல்லாக் குழந்தைகளும் இக்குதூஹலமான தூதனை நோக்கிச் செவி சாய்க்கவில்லையா? நமது செவியும் ஹிருதயத்திற்கு ஒரு வாசலல்லவா?

இது நிற்க, வேளாண்மையே முக்கிய ஜீவனமாகக்கொண்ட நமது கிராமங்களில் விவசாயக் கல்வி அவசியமல்லவா? இல்லாவிடில், விரைக் குங்காலம் வரும்பொழுது குடியானவர்கள் தங்கள் குழந்தைகளைப் பள் ளிக்கூடம் அனுப்பமாட்டார்களா? இதை அனுசரித்து, ஐந்தாவது வகுப்புக் குழந்தை உடனேயே விவசாயக் கல்வி என் ஆரம்பிக்கக்கூடாது? அதே மாதிரி நெசவுத் தொழிலுள்ள ஒரு கிராமத்தில் அக்கைத்தொழில் ஆரம் பிக்கப்பட்டால் நலமே. இம்மாதிரி சீர்திருத்தங்கள் ஏற்பட்டால்தான், கட்டாய ஆரம்பக் கல்விச் சட்டம் இனிது நிறைவேறும்.

மேலும், கல்வி முறைகளில், ஏதேச்சையான (Voluntary) கல்வி முறையா, அல்லது இராஜாங்கக் கல்வி ஸ்தாபனங்கள் வேண்டுமா, என்ற கேள்வி முன்னுக்கு வரலாம். இயற்கையாகவே, ஸ்வயராஜ்யக் கோரிக் கையும், ஸ்வய பாஷையின் முன்னேற்றத்திலுள்ள ஆசையும், ஸ்வேச்சை யான ஸ்தாபனங்களை ஏற்படுத்தக்கூடும். எல்லாவற்றையும் ராஜாங்கமே செய்யவேண்டும் என்ற கோரிக்கை சற்று பலஹீனம் அடையக்கூடும். இம்மாதிரிக் கல்வி ஸ்தாபனங்கள் ஏற்படுத்துவதில் இப்பொழுது வீணாகச் செலவழிக்கப்படும் முயற்சிகளைப் புகவிடுவோமேயானால், நவீனமா யிருக்கவேண்டு மென்கிற ஆசை மாத்திரம் நமது புராதனக் கல்வி முறை களை ஆராய்ச்சி செய்வோமேயானால், வரிவேண்டாம் என்ற முதிய கூக்கு ரல் மாத்திரம் நமது தனவந்தர்களைச் சற்று சமூகவிஷயங்களில் சிரத்தை காண்பிக்கத் தூண்டுமேயானால், இதற்குள்ளாக நமது கிராமங்களில் உண்மையான கல்வி முறை ஏற்பட்டிருக்கக்கூடும்.

எதார்த்தவாதி யானவன் தனது குற்றங்களை ஒரு நாளும் மறைக்க மாட்டான். இவ்வாண்டு வரையில், மேடைகளிலும், சபைகளிலும், நமது வாசாலரர்கள் வெகு நன்றாய்க் கண்டனம் செய்திருக்கிறார்கள். நமது கல்விமான்களும், பரிபாலகர்களும், ராஜாங்கப்பள்ளிக்கூடங்களின் பிரதி பிம்பங்களையே ஸ்தாபித் திருக்கிறார்கள். இதுவும் ஒரு நன்மைதான்; ஆனால், மேடைகளில் கிருதத்ரேதாயுகங்களைப்பற்றியும், ராமராஜ்யத்தைப் பற்றியும் சவிஸ்தாரமாக எடுத்துரைத்து விட்டு, நடப்பில் விசேஷசிரத்தை யில்லாவிடில் என்னே பயன் ? ஹரித்வாரத்திலுள்ள "குருகுல ஸ்தாபன மும்," போல் பூரிலுள்ள டாகூர் பள்ளிக்கூடமுந் தவிர வேறு எங்கு பார் த்தாலும் ஆடுபோன வழியாய்த்தான் தென்படுகிறது. இறுதியில் கலா சாலைத் தொகுதி விருத்தியடையினும் கல்விமான்களது அதிருப்தியும் வளர்ந்து ஓங்கி வருகின்றது. தொகுதி மாத்திரம் போதவே போதாது. இயல்பு முக்கியமாய்க் கவனிக்கப்படவேண்டும். மேல்நாடுகளில் யுத்த த்தைவென்ற வாலிபர்கள் மைதானத்திலும் முன்னேற்றம் அடையும்

பொழுது, நமது சிறந்த கல்வியாளர்க்கோ, குமஸ்தா, வக்கீல், அல்லது வெகு பரிதாப நிலைமையிலுள்ள உபாத்திமைத் தொழில் இவை மூன்றே முன் நிற்கின்றன. ஆனால், இதற்கு ஆஸ்பதமாக நாமும் நமது கல்விமான்களும் பரிபாலகர்களும் இருந்திருக்கிறோம். இராஜாங்கத்தை மாத்திரம் குற்றம் சொல்வதில் பயனில்லை. இப்பொழுதுதான், பரோடா, மைசூர், காசி, முதலிய இடங்களில் சற்று விழித்திருக்கிறார்கள். எவ்வாறாயினும், சென்ற நாட்களில் நமது கடமையைச் சரிவரச்செய்தோம் என்று சொல்வதற்கில்லை.

அறிஞர்கள் அவசியம் ஆராயவேண்டிய விஷயங்களில் சிலவற்றை மாத்திரம் இங்குவரைந்தோம். தேர்ச்சியுள்ள கல்வியாளர்களும் விவேகத்துடன் பரிபாலனம் செய்யக்கூடிய ஜனஸமூஹங்களும், இம்முறையில் முன்னேற்றம் காண்பிப்பாரேயாகில் நமது குறைகள் நீங்கும் என்பதற்கு ஐயமே இல்லை. க. மு. இராமபத்திர சாஸ்திரி. பி-ஏ; யல். டி.

குறிப்பு:—நண்பர்கள் இவ்வரிய வியாசத்தைக் கவனம்வைத்து வாசித்து நன்குணருமாறு வேண்டுகிறோம். பத்திரிகாசிரியர்.

---

## ஆரம்ப பாடசாலை உபாத்தியாயர்களும் அவர்களின் நிலைமையும்

ஆரம்ப உபாத்தியாயர்களின் நிலைமை மிகவும் கேவலமாய் இருக்கிறதென்பது யாவரும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். இலவச கட்டாயப் படிப்பு செழித்தோங்க வேண்டுமெனச் சட்டம் வெளிவந்த பின்னும் உபாத்தியாயர்களுக்குத் தகுந்த சம்பளம் கொடாவிட்டால் அநேக எலிமெண்டரி பாடசாலைகள் நம் நாட்டில் ஏற்படுவதில் எவ்வித பிரயோஜனமும் இல்லை. இப்போதே அனேகம் போதனாமுறை பயிலாத உபாத்தியாயர்கள் நம் இராஜதானியில் இருக்கிறார்கள். அப்படி யிருக்க, சொல்ப சம்பளத்தில் மிகுந்த உபாத்தியாயர்களைப்பெற்றுக் கல்வியைப் பல பாகங்களிலும் பரவச் செய்வது அசாத்தியம். பரிபூர்ண ஞானமுள்ள உபாத்தியாயர்களுள்ள பாடசாலைகள் ஏற்படின் தினே தினே பிள்ளைகள் தேர்ச்சியடைவார்கள். பாடசாலையின் சங்கையும் அதிகரிக்கும். தற்போது சொல்ப சம்பளம் பெற்று வயிறு வளர்க்கும் உபாத்தியாயர்கள் மன அமைதியின்றி வேலை செய்யவேண்டி இருக்கிறது. மனஅமைதி இல்லாத ஒருவர் தம் கடைமையைச் சரிவரச் செய்ய இயலாதவராய் இருக்கிறார். தமக்குள் ஒருவரைச் சட்டசபை அங்கத்தினர் ஸ்தானத்திற்கு அனுப்பத் தக்க பாக்யத்தை உடைய நம்மவர்களின் மக்களுக்கு ஆரம்பப் படிப்பு அவசியமென்று நாம் எடுத்துரைக்க வேண்டியதில்லை.

உபாத்தியாயர்களுடைய பிரதான குறை மற்றொன்று; அதாவது: ஒரு பாடசாலையில் பயின்ற ஒரு மாணாக்கன் சில வருஷங்கள் கழித்து அதே பாடசாலையில் உபாத்தியாயராக அமர்கிறான். இவ்வுபாத்தியாயர்களுக்கும் இவரிடம் கற்றுக்கொண்டு உபாத்தியாயராய் இருப்பவருக்கும் யாதொரு வித்யாசமும் சம்பளத்தில் காட்டப்படுவதில்லை. உபாத்தியாயர்களின் அனுபோகம் முதிர, முதிர, பிரதி வருஷமும் அவருக்குச் சம்பளம் உயர்த்திக்கொண்டே போகவேண்டும். அப்போதுதான் ஒரு நிலைமை

உபாத்தியாயரிடம் வேலை செய்யும் உதவி உபாத்தியாயருக்கும் பிள்ளைகளுக்கும் மதிப்பு எற்படும். உபாத்தியாயர்களும் உற்சாகத்துடன் வேலை செய்வார்கள். சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் போலவே உபாத்தியாயர்களுக்கும் அனுபோகத்தை யொட்டிச் சம்பள உயர்வு ஆரம்ப பாடசாலைகளில் செய்வது அத்தியாவசியம். அநேகம் எலிமென்டரி பாடசாலைகள் சரிவர வேலை செய்யாததின் காரணம் மேல்காட்டியபடி ஒரே பாடசாலையில் படித்த ஒரு மாணவன் அடுத்த தினமே உபாத்திமைத் தொழிலிலமர்வதேதான். இவ்வழக்கம் பெரும்பாலும் ஆரம்ப பாடசாலையி லிருப்பது சாதாரணமா யிருக்கிறது. பிள்ளைகளுக்கு பாஷா ஞானமும் படிப்பின்பேரில் ஆசையு முண்டாக வேண்டுமாயின், தகுந்த வயதும் வயதிற்குத் தகுந்த அறிவும் அவசியம். மேலும் போதனாமுறை பயின்று திரும்பிய உடனே உபாத்திமைத் தொழிலெனு மாயுதத்தைக் கொடுத்துவிட்டால் அவ்வாயுதத்தின் அவசியத்தையும், எம்மாதிரி அதை உபயோகிக்க வேண்டுமென்பதையும் நன்கு அறியாது தமது ஆயுதம் எவ்வளவு தூரம் வேலை செய்யும் என்னும் அவசரமேலிட்டுத் தமக்கு என்றும் கிடைக்காத பெரும் பதவி கிடைத்துவிட்டதென்று ஆசையுற்றுத் தமது கடமைகளையும் தேச க்ஷேமத்தையும் மறந்து தாம் எம்மாதிரி மேலதிகாரிகளிடம் நடந்து கொள்ளவேண்டும், தம்மிடமிருந்து பெற்றோர்கள் எதிர்பார்க்கப்பட்ட விஷயங்கள் யாவை, நாம் பிரதிநாளும் செய்யவேண்டிய வேலைகள் என்ன, அவைகளைச் செம்மையாய் செய்திருக்கிறோமா என்ற பல விஷயங்களைக் கவனியாது உபாத்திமைத்தொழிலுக்கே ஓர்வித அகௌரவத்தைக் கொண்டுவந்து விடுகிறார்கள். ஒவ்வொரு உபாத்தியாயனும் போதனாமுறைப் பாடசாலைகளில் சில வருஷங்கள் பயின்று வந்ததினாலேயே பூரணமான ஞானம் பெற்றானில்லை. அறிவுமட்டிலும் இருந்தால போதாது. அறிவை விருத்திசெய்ய அவ்வறிவு பரவும் வண்ணம் தம் அறிவை வெளியிடும் திறமை வேண்டும். தாம் நடந்துகொள்ள வேண்டியவிதம், பொறுமை, சரியான காலத்தில் வேலை செய்தல், ஜீவகாருண்யம், ஈவு, இரக்கம், பிள்ளைகளை ஒட்டி வேலை செய்தல் என்ற பல நற்குணங்கள் தேவை. போதனாமுறைப் பாடசாலையிலிருந்து திரும்பிய உடன் எதாவது ஒரு பாடசாலையில் நற்குணமும் நல்ல திறமையும் வாய்ந்த, ஒரு தலைமை உபாத்தியாயரின் பாாவையில் சில வருஷங்களில் விடும் பக்ஷத்தில் அவ்வுபாத்தியாயர் மிகவும் சிரேஷ்டமாவார். ஒவ்வொரு ரேஞ்சிலும் சில முக்கியமான இடங்களுக்குப் போதனாமுறையின்று திரும்பும் உபாத்தியாயர்களை அனுப்பி விட்டு அவர்களிடம் திருப்திகரமான வேலையைக் கண்டு பின்னரே தனிப் பாடசாலையில் வேலை செய்ய விடவேண்டும். அப்போதுதான் ஆரம்பப்படிப்பு விர்த்தியாகும்.

இவ்வாரம்பப்படிப்பு மிகவும் சீர்குலைந்திருப்பதற்கு காரணம் செஷன் ஸ்கூலெனப் பெயர் வழங்கும் பாடசாலைகளில் குறுகிய காலங்களில் எழுத்துக்கள் கற்றுப் படிப்பெனும் வாசனைமுகர்ந்து வெளிவரும் உபாத்தியாயர்களின் ஆதரவில் சிரேஷ்டமான விலை மதிக்கத்தகாத மூளையையுடைய பிள்ளைகளை விடுவதேதான். பூரா பழுக்காத பிஞ்சுகளை சுயேச்சையாய்ப் பழுக்கவிடாது, பழுக்கும்படி வெப்பத்தில் வைக்கப்படும் பழங்களைப் போல்குறுகிய அறிவுபெற்ற ஒருவர், தெளிவுடன் பிள்ளைகளுக்குப்போதிப்

பதும், பூரணமான ஞானம் கொடுப்பது மெப்படி? உபாத்திமைத்தொழில் ஜவாப்தாரித்தனத்தை உடையது. பிரைமரி பரீக்ஷையில் தேறிப் பயின்ற ஒருவரை, போதனுமுறை பயின்ற உடனே தாம் படித்த வகுப்பிற்குக் கீழ் உள்ள மூன்றாவது, நாலாவது, சிலசமயங்களில் தாம் படித்த வகுப்பிற்கே போதிக்கும்படி விடுவது எவ்வளவு பலனைத் தரும்? பூரணஞானம் பெறாது குறுகிய அறிவை உடைய ஒருவர் எப்படி சந்தேகமற ஒரு விஷயத்தை ஒரு மாணவனுக்குப் போதிப்பது சாத்தியமாகும்? உபாத்தியாயர்களுக்குத் தம் கடமை சரிவரச் செய்ய வேண்டுமென்ற அவா ஒன்றிருப்பின் அவர்கள் அடிக்கடி தம் அறிவை விசாலித்துக்கொள்ளத் தம் தம் இனத்தைச் சேர்ந்த மற்றச் சகோதர உபாத்தியாயர்களுடன் பழகியும், அரிய பெரிய நூல்களை நன்கு வாசித்தும், தெரியாதவற்றை அக்கரையுடன் தெரிந்துகொண்டும், பிரதி மாதங்களிலும் கூடும் தமது சங்கக் கூட்டங்களில் கலந்து பேசியும் விர்த்தி செய்துகொள்ள வேண்டும். ஒரு உபாத்தியாயருடைய நல்ல வேலை சிறப்பிக்காவிடினும், அவருடைய கடமைகளை அவர் செய்யின் அதற்குத் தகுந்த ஊதியம் கிடைக்காமல் போகாது.

க. வரதராஜன்,
தலைமை உபாத்தியாயர், போர்ட் பாடசாலை, ஹரூர்.

---

குறிப்பு:—நமது நண்பர் கூறியபடி இப்போதிருக்கும் உபாத்தியாயர்களை யேற்படுத்தும் முறையில் 'உபாத்தியாயர்' பதவிக்கு யார் உரியவர்கள் என்பதே சற்றும் கவனிக்கப்படுவதில்லை.

இப்போது பாலர்களாக ஆரம்பக் கல்வி கற்போரே பிறகு தாய்நாட்டின் க்ஷேமாபி விர்த்திக்குப் பாடுபடும் புருடர்களாவோர்கள். ஆரம்பக் கல்வி கற்கத் தொடங்கும்போது அவர்கள் மனம் உருவம் பதியாத புகைப் படம் பிடிக்கும் கண்ணாடி போன்றது. இப்போது எத்தகைய உபதேசங்கள், கொள்கைகள், அபிப்பிராயங்கள் அவர்கள் மனதிற் பதிகின்றனவோ அவையே அங்கு வேரூன்றி நிலைத்துப் பின்னால் பலனளிக்கும். மதப்பற்றும், தேசபக்தியும், நமது தாய்நாட்டின் பூர்வீகப் பெருமையும், தெய்வீகத்தன்மையும், நம்மதத்தின் மகிமையும் இப்போதே அவர்கள் மனதில் பதிந்து நிலைக்கும்படிச் செய்யவேண்டும். இன்றேல் நம் சந்ததியாரால் நம் தாய்நாடு சற்றும் முன்னேற்ற மடையாது. இப்போதுதான் தெய்வவழி பாடும், நன்னடக்கையும் அவர்களுக்குப் போதிக்கப்பட வேண்டும்.

இந்த விஷயங்கள் யாவும் சிறுவர்களுக்குப் போதிக்க வேண்டியது நமது கடமை யென்பதை ஆரம்பக் கல்வி உபாத்தியாயர் நன்குணர வேண்டும். ஆடுகளைக் கிடை மடக்குவதுபோல், பிள்ளைகளை யெங்கும் எழுந்து ஓடவொட்டாமல் கையிற் கோலேந்திக் கவனித்துக்கொண் டிருப்பதும், பாடபுத்தகத்தி லுள்ளவற்றைக் கற்பிப்பதும் மட்டுமே நமது வேலையென்று கருதுவோன், சிறந்ததும், கௌரவம் பொருந்தியதும், போற்றற்குரியதுமான உபாத்திமைத் தொழிலுக்கு எள்ளளவும் அருகனுகமாட்டான்.

"ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை" என்றபடி பிள்ளைகளுக்கு நல்லொழுக்கம் கற்பிப்பதே உபாத்தியாயரின் முதற் கடமை யாகும்; பாஷைக் கல்வி இரண்டாவதே யாகும். கல்வியின்றி ஒழுக்கமட்டு மிருந்தால் அந்த ஒழுக்கத்திற்குச் சிறப்புண்டு. ஒழுக்க மில்லாக் கல்விக்கு ஒரு சிறப்பும் இல்லை.

"கல்வி கற்பது வயிற்றுப் பிழைப்பிற்கு" என்ற அபிப்பிராயம் நம் மக்களிடமிருந்து அடியோடு களையப்பட்டு, கல்வி கற்பது ஞான மடையவும், நம் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்கு உதவியா யுழைக்கவுமே என்ற அபிப்பிராயம் அவர்களுக்கு ஊட்டப்படவேண்டும். தெய்வ வழிபாட்டைப் பற்றிய பிரஸ்தாபமே யில்லாத கல்வி ஒருபோதும் கல்வியே யாகாது.

இத்தகைய கல்வியைப் போதிக்கும் ஆரம்பக்கல்வி உபாத்தியாயர் எத்தகைய யோக்கியதைகளை யுடையவராக இருத்தல் வேண்டும். பிரைமெரி பரீட்சையில் தேர்ச்சி யடைந்து போதனா முறை பாடசாலையில் கொஞ்ச காலம் வாசித்து விட்டால் போதுமா? கல்வி கற்றுக்கொண்டாலும் சொல்வன்மை யாவர்க்கும் எளிதில்கிடைத்து விடுவதல்ல. போதனா முறைப் பரீட்சை கொடுத்துவிட்டு வந்தவர்களில் பலர் கற்பிக்கும் திறமை யில்லாதவர்களாகவே யிருப்பது பிரத்தியட்சம்.

ஒவ்வொரு பிள்ளையின் மனோநிலைமை யித்தகைய தென்றும், அவன் அறிவின் சூக்ஷமத் தன்மை யித்தகைய தென்றும் உணர்ந்து கொண்டு இந்த விஷயத்தை இவனுக்கு இன்ன திருட்டாந்தத்தோடு இன்ன விதமாகக் கூறினால் இவன் சுலபமாக அறிந்துக் கொள்வான் என்று தனக்குள் அறிந்து கொள்ளும் திறமை உபாத்தியாயரிடம் இருத்தல் வேண்டும். பிராம்மணப் பிள்ளைக்கு கோரோசனையைப் பற்றிக் கூறும்போது "அவித்த கோழி முட்டையின் மஞ்சட் கருவைப் போல் இருக்கும் கோரோசனை" என்று திருட்டாந்தங் கூறும் புத்திசாலி உபாத்தியாயரா யிருந்தால் என்ன பயன்?

நல்லொழுக்கம் தீயொழுக்கங்கள் இன்னின்னவை யென்பதை யனுபவமாக அறியாத வாலிபர்களை உபாத்தியாயர்களாக அமர்த்தினால், அவர்களுக்கு அத்தொழில் எத்தகைய பெரிய பொறுப்புடைய தென்பது தெரியுமோ? தெரியாது. அவர்களுக்கே ஒழுக்கந் தெரியாதெனின், சிறு பிள்ளைகளுக்கு அவர்க ளெங்ஙனம் ஒழுக்கம் போதிப்பார்கள்? குருடனுக்குக் குருடன் எப்படி வழி காட்டி யாவான்?

கல்வியும், கற்பிக்கும் சக்தியும் ஒருவன் உடைத்தா யிருப்பதோடு உலக அனுபவமும் உடையவனாக விருந்தால்தான் அவன் உபாத்திமைத் தொழிலைச் சரிவர நடத்தக் கூடியவனாவான். போதனாமுறை சற்றபின் சில வருடங்கள் நல்ல அனுபவ முடைய உபாத்தியாயரின் பார்வையிலிருந்து அவரிடம் தேர்ச்சி பெற்றபின்பே தனிமையாக ஒரு பாடசாலையை நடத்த ஒரு உபாத்தியருக்கு அனுமதி யளிக்கப்பட வேண்டும்.

இப்போது கல்வி யபிவிர்த்தியைப் பற்றிய ஏற்பாடு துரைத்தனத்தாரால் நம்மவரிடமே விடப்பட் டிருக்கிறதன்றோ. அதற்காக மந்திராலோசனை சபையின் அங்கத்தினராக ஏற்பட்டிருக்கும் அறிவாளிகளாகிய

கனவான்கள், தங்கள் தாய் நாட்டின் க்ஷேமத்திற்கென்று உழைக்க எண்ணங் கொண்டவர்களே யென்பது உண்மையாயின், ஆரம்பக் கல்வி முறைமையைப் பற்றியும், அந்த உபாத்தியாயர்களின் பரிதாப நிலைமையைப் பற்றியும் கூடியசீக்கிரத்தில் தங்கள் கவனத்தைச் செலுத்தித் தக்க ஏற்பாடுகளைச் செய்வார்கள் என்று பூரணமாக நம்புகிறோம். எல்லாம் வல்ல கருணாநிதி அருள் புரியப் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத் ஸத்.

பத்திரிகாசிரியர்.

---

## இல்லறம்—விக்கிரகாராதனை

(275-ம் பக்கத் தொடர்ச்சி.)

இனி ஆலோசிக்குமிடத்தில் பாவனையாலேயே யாவம் சித்திக்கின்றன. ஆதலால் ஈசுவரன் விஷயத்திலும் அந்தப்பாவனையே சித்தியைக் கொடுக்கும். வேதமும், "அவர் பாவனையாற்றா னறியத்தக்கவர்" "பாவனையாலேயே அறியப்படுவான் மஹேசன்" "அவனுருவம் ஒருவருக்குந் தோன்றாது" "அவரைக்கண்ணுற் கண்டவனில்லை" என்று கூறிப்பின்னும், "அந்தப்பரமான்மாவைக் காண்டல் வேண்டும்; கேட்டல் வேண்டும்; சிந்தித்தல் வேண்டும்; நிஷ்டையில் தரிசிக்கவேண்டும்" என்பனவாதி வாக்கியங்களால் உபாசனையையும் விதித்தது. எப்படி வழி பட்டுச் சிந்திப்பதெனில், நீல கண்டன், திரிலோசனன், உமாசகாயன், பொன்மயமேனியன், பிநாகபாணி, கிருஷ்ணபிங்களன் என்றும், சங்கு சக்கிராதி பஞ்சாயுதங்களை யுடையவன், லக்ஷ்மீபதி, பீதாம்பரதாரி, சேஷசயனன் என்றுங் கூறிப் பிரமத்தின் சகுண சொரூபத்தை வியந்து அத்திருவுருவைப் பூசித்துப் போற்றிச் சிந்தித்து வழிபடுகவென்று விதித்தது. ஈசனுக்குப் பக்தாநுக்கிரக காரணமாக அளவற்ற திருமேனிகளுள வேனும், சகல பிரபஞ்சமும் அவனுக்குச் சொரூபமாயினும், வேதம் எடுத்தோதிய மேற் குறித்த சொரூபங்களை மேலோரியர் வழிபட்டு [illegible] ன்றனர். இச் சொரூபத்தில் ஏதேனும் ஒன்றை தனது விருப்பத்தினபடி கல்லினாலோ, பொன்னினாலோ செய்தாயினும், படத்தில் வரைந்தாயினும் தன்னெதிரில் வைத்து, மனதை மற்றெங்கும் செலுத்தாது நிறுத்திச் சுரபி முத்திரை யாதிகளாற் கைகளைக்குவித்து மந்திரத்தை யுச்சரித்து அப்பிம்பத்தின்கண் தன்மனதில் நிற்கும் பக்தியைச் செலுத்துவானேல் அந்தப் பரம்பொருள் அதில் ஆவிர்ப்பவிக்குமென்பதில் தடையேயில்லை. அப்போது அவன் சரீரத்தி லமைந்த ஜீவசக்தி அந்தப் பிம்பத்தில் பிரவேசிக்கும். இப்படிச் செய்வதனால் எங்கும் வியாபித்து நிற்கும் பரம் அந்தப் பிம்பங்களில் நீண்ட காலம் நிற்கும். அப்போது தன்னைத் தரிசிக்கும் தொண்டரது மனமொழிமெய்களை யப்பிம்பம் கிரகிக்கும்.

இப்படி பிம்பத்தை நோக்கிவணங்கும்போது கண் விக்கிரகத்தை நோக்கினாலும் மனம் அதில் ஆவிர்ப்பவித்திருக்கும் பிம்பத்தின் சொரூபத்தையே நோக்கும். அப்பிம்பமும் அத்தொண்டருளத்தில் ஆநந்தத்தை விளைவித்து நிற்கும். சிறிது சிறிதாக அந்தப் பிம்பமே பிரம சொரூப

மாகக் காணப்படும். ஆகவே பிரமசொரூபத்தை மனமும், கண்ணும் ஏககாலத்தில் கண்டு களிக்கும். வாய் ஸ்தோத்திரம் கூறி மகிழும். கைகாலாதி அவயவங்கள் ஆர்ச்சித்துப் பிரதட்சணம் செய்து மகிழும்; சரீரம் அஷ்டாங்க சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து பயன் பெறும். இதனுல் மனோவாக்குக் காயங்களென்கிற திரி காணங்களும் ஈசுவரனுக்கே அர்ப்பிக்கப்படும். இதனுல் திரி காணங்களாலும் செய்யப் பட்ட பாப கன்மங்கள் பறக்கும். சரீரமெல்லாம் நிர்மலமாம். மனம் களங்கமற்றுச் சுத்தஸ்படிகம் போலத்துலங்கும். அப்போது பரம் பொருளின் சிதக்ஞனந்தத்திருமேனி அதில் பிரதிபிம்பித்துப் பேரானந்தத்தை விளைவிக்கும். இவ்வாறு பல நாட்கள் நிஷ்டைகூடியிருக்க அந்தச் சித்கஞனந்தத் திருமேனி நிர்க்குண சொரூபமாய்த் திகழும். அப்போது ஆன்மா பரம்பொருளோடு தானது வென்னும் வேற்றுமையறக் கலக்கும். அப்படிக்கலத்தலே ஜீவன்முத்தியாம். ஆதலால் விக்கிரகாராதனத்தினுலுண்டாகும் நன்மைக ளளவிலடங்கா. அதுபற்றியே அநாதி காலந்தொடங்கி நமது ஆரியப் பெரியோர்கள் எல்லாரும் விக்கிரகாராதனத்தைச் சிரேஷ்டமாகக் கைக்கொண்டு மகிழ்ந்து வருகின்றுர்கள். இனி ஆலயங்களிலும், கிருகங்களிலும் பிம்பாராதனம் செய்வதைப்பற்றிச் சிறிதெழுதுவாம். ஆலயங்களில் கடவுளை வழிபடுதல் நற்கதியை அளிக்குமென்பதை நன்ருய் விளக்குவோம்.

சிலர் பெண்கள், பிள்ளைகள் விளையாடுகிற மரப்பாவை, கற்பாவைகளுக்கும், இந்தத் தெய்வ சொரூபமாகிய விக்கிரகங்களுக்கும் பேதம் யாதெனக்கூறி மகிழ்வர். அதனை யிவ்வாறு மறுக்க; விளையாட்டுக் கருவிகளாகிய சொரூபங்களுக்கும், கோவில் மடம் முதலிய வற்றில் அடித்து வைத்திருக்கும் சொரூபங்களுக்கும் விக்கிரகமென்று பேரில்லை. அவற்றைப் பிரதிமையென்று கூறுவர் வடமொழிவல்லோர்; அந்தச் சொல்லே தமிழில் பதுமையென்றும், பொம்மையென்று கிராமியச் சொல்லாகவும் திரிந்து நிற்கின்றது. இச்சொரூபங்கள் தெய்வமென்று கருதி ஒருவரும் வணங்கியதில்லை. வணங்கியதாகக் கேள்விப்பட்டதுமில்லை. ஆதலால் அது தெய்வ சொரூபமாகாது; விநோதப் பதுமைகளேயாம். நாமிங்கெடுத்துக் கொண்ட விக்கிரக மென்பது அதுவல்ல. வேதங்கள் புகழ்ந்து கூறிய தெய்வ சொரூபங்களைக் கல்லாலோ, மரத்திஞலோ, உலோகங்களாலோ சித்திரப்படமாகவோ செய்து பிராணப் பிரதிஷ்டாதி வேதமந்திரங்களால் தெய்வத்தை அதனிடம் வருவித்து வணங்கப்படுவது எதுவோ அதுவே விக்கிரகமென்று பேர்பெறும். விக்கிரகமென்பதற்குச் சொரூபமென்று பொருள். ஆராதிக்கப்படும் சொரூபத்துக்கே விக்கிரகமென்பது சாஸ்திரங்களின் அபிப்பிராயம்.

விக்கிரக மகிமையைக் கூறுவதற்குமுன் பார்ப்பதாலும், தொடுவதாலும், தொனியாலும் மனிதசக்தி மற்றோர் பொருளினிடம் சென்று சேருமென்று முன்னர்ப் பல விடங்களிற் கூறியதை நினைப்பூட்டுகின்றோம். அப்படியே பூதப்பொருள்களின் சக்தியும் அவற்றோடு சம்பந்தப்பட்டிருக்கும் மற்றோர் பொருளினிடம் சேரு மென்பதையும் ஞாகப்படுத்துகிறோம்: அச்சக்தி மூவகைப்படும்: அவை ஒளஷதம் (புல்பூண்டு செடிகளின் சக்தி), பாசுகம் (ஜீவப்பிராணிகளிலுள்ள சக்தி),லௌகிகம்(உலோ

கங்களிலுள்ள சக்தி), இம் மூவகை சக்திகளையும் ஒன்று படச் சேர்த்துப் பிராணசக்தி யுண்டாக்கப்பட்ட சொரூபமே விக்கிரகமெனப்படும். சிலைகளில் உலோகாம்ச முள்ளவற்றைத் தேர்ந்தெடுத்து விக்கிரகம் செய்யப்படும். உலோகங்களில் எல்லா உலோகங்களிலும் செம்பு, பித்தளை முதலிய தேயு அம்சம் நிறைந்ததும், கிராகிய (மின்சார) சக்தி யுள்ளதுமான ஐந்து வகை உலோகங்களை முறைப்படி கூட்டியே செய்யப்படும். பஞ்சலோகங்கள் சேர்ந்த இச்சொரூபம் நமது சரீரத்திலுள்ள பல சக்தியைவிலக்கவும், இரத்த சுத்தி செய்யவும், ஆரோக்கியத்தை யுண்டாக்கவும் வல்லதென்பது பிரத்தியட்சம். இதை யுணர்ந்தே தற்காலத் தவரும் பஞ்சலோகங்களாற் செய்யப்பட்ட மோதிரத்தைக் கையில் மாட்டிக்கொண்டும், பதக்கம் போலச் செய்து கழுத்தில் கட்டிக்கொண்டும் மகிழ்கின்றார்கள். இதனால் இரத்தமும், நாடிகளும் சுத்தமாகுமென்பதே அவர்களின் கருத்து. அப்படியானால் அவற்றைவிடப் பெரிதாகச் செய்யப்பட்ட சொரூபங்களுக்கு அதிக சக்தியுண்டென்பது விளங்கும். சில சிலைகளிலும் சீதோஷ்ண சக்திகள் இயற்கையிலேயே அமைந்திருக்கின்றன. அச்சிலைகளுக்குக் கிராகிய சக்தி (மின்சார சக்தி) சுபாவத்திலேயே யமைந்திருத்தலால் அச்சிலைகளால் தெய்வ சொரூபமாகிய விக்கிரகம் செய்யப்படுகின்றது.

இந்த விக்கிரகத்துக்கு முன் கூறிய மூவகைச் சக்தியையும் சேர்க்க வேண்டும். முதலில் அந்த விக்கிரகத்தைத் தானியங்களில் புதைத்து வைக்கின்றார்கள். குறிப்பிட்ட காலம் வரைக்கும் தானியத்திலேயே யிருக்கும். இதனால் அந்த விக்கிரகத்தில் பிரதிவி பூத சக்தி சேர்க்கப்படுகின்றது. பிறகு அப்புவின் சக்திசேரும் பொருட்டுச் சிறிது காலம் அந்த நீரில் போட்டுவைக்க வேண்டும். இப்படிச் செய்வதற்கு அதிவாச ஸம்ஸ்காரம் என்று கூறுவர். அதன் பிறகு அந்த விக்கிரகத்தை ஹோமாக்கினியின் மீசபத்தில் வைப்பார்கள். அந்த ஹோமாக்கினியில அற்புதமான நல்ல பூண்டுகளையும், தேயு சக்தியுள்ள மரக் கொப்புகளையும், நெய் பால் தேன் பொரி எண்ணெய் பழம் இவைகளை மந்திர பூர்வமாக ஹோமம் செய்வார்கள். அவற்றினாலுண்டாகும் புகையை முன்ன பூத சக்தியுள்ள அந்த விக்கிரகம் தன்னிடம் ஆகர்ஷித்துக்கொள்ளும். அந்த சமையத்தில் பல அந்தணர்கள் சேர்ந்து பிரமத்தியானத்துடன் வேத மந்திரங்களை யிரைந்து ஓதுவார்கள். இவ்வந்தணர்களின் நோக்கத்தாலும் தொனியாலும் மனித சக்தி விக்கிரகத்திற் சாரும். (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பெண் கல்வி

பெண்பாலர்க்குரிய பருவங்களேழில் பேதை, பெதும்பை, மங்கைப் பருவங்களே அவர்கள் கல்விக்குரியனவாம். மற்றைய நான்கும் கற்றவற்றை அநுபோக முறையிற் காட்டுவதற் கேற்றனவாம்.

2. "Home is the best school for character, என்ற ஆங்கில மொழிப்படி, நன்னடக்கை பயில்வதற்கு ஏற்ற இடம் இல்லமே. தாய் தந்தையர்களே தங்கள் மக்கள் நன்னடக்கைக்கு காரண கர்த்தராவர்.

குலவிருத்தி, குடும்பவிருத்தி குலமங்கையர் வசமிருப்பதாலும், 'வாழ்மனை தனக்கழகு குலமங்கை', 'மனைக்கு அதிமனையாள்' என ஆன்றோர் மொழி யுளதாதலாலும், பெண்களை இளமையிலேயே அத்தகைய நெறியில் பயிற்றுவது பெற்றோர் கடனாகும்.

3. இந்து மதாசாரத்திற்கேற்ற கல்விதான் நம் இந்துப்பெண்களுக்கு அவசியமே யொழிய, மேனாட்டு நாகரீகத்தை யொட்டி, சர்வகலாசாலைப் பட்டத்துடன் உயர்தரக் கல்விகற்று, ஆண்பாலர் பெண்பால ரென்கிற பேதமின்றிச் சபைகளில் கூடிக்குலாவுவதும், தனியே உலாவுவது மாகிய கல்வியன்று. இதா சீர்திருத்தம்! மேனாட்டு நாகரீகம்!!

4. "கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்-தாளை வணங்காத் தலை" என்ற படி பெண்கள் இளமையிலேயே தெய்வபக்தி இன்னதென அறியவேண்டிய தவசியம். ஆதலின், பெண்கள் அதிகாலையிலேயே படுக்கைவிட் டெழுந்து காலைக்கடன்களை முடித்து, தந்தசுத்தி செய்து, முகங்கழுவித் திலதமிட்டுப் பூசைவீட்டைச் சாணங்கொண்டு மெழுகிச் சுத்திசெய்து சித்திரக் கோலத்தால் அலங்கரிக்கத் தெரிய வேண்டிய தவசியம்.

சிறுவயதிலேயே காலை எட்டுமணிவரை தூங்கி விழித்து, இருந்த இடத்திலேயே அரை, குறையாய்ப் பல்விளக்கி முகங்கழுவிக் காலை உண்டி கொண்டு 'எதூரங்காய்' முதலிய விளையாட்டுகளில் தேர்ச்சியடையும் பெண்களா குடும்ப பாதுகாப்புக் குரியராவர்? தொட்டிற்பழக்கம் சுடுகாடு மட்டு மன்றோ!

5. ஔவையாரியற்றிய அரிச்சுவடி முதல் தேவர் திருக்குறள் வரை யிலுள்ள அரியநூல்களை அறவே கற்றுணர்வதும், மகாபாரதம், இராமாயணம், பாகவதம், பக்தவிஜயம் முதலியவசன நூல்களைப்படித் துத் தேர்ச்சியடைய வேண்டியதும் முக்கியம். பண்டைக்காலத்தில், பெண்கள் எத்தகைய குணதரராய் எவ்வித நெறியை மேற்கொண்டு பெற்றோர், உற்றோர், மற்றோர்களிடத்திலும், மணமானபின் கணவன், மாமி, மாமன், நாத்திமார், மைத்துனன் மார்களிடத்திலும் எவ்விதம் பக்தி பூண்டொழுகி வந்தார்க ளென்றும், அவர்கள் நடை, உடை, பாவனைகள் எத்தன்மைத் தெனறும் நன்கு புலப்படுமன்றோ! இதை நீக்கி, 'பைபில் உமன்' களைக்கொண்டு கல்வி பயிற்று வித்தல் விவேகமாமோ!

இக்காலத்தில் பெண்களில் அநேகர் கல்வியே கற்காது, அழகையும் தன்னை யலங்கரிப்பதையுமே மேற்கொண்டு தங்களைமணக்கும் கல்விவாய்ந்த ஆடவர்முன் நிரக்ஷர குக்ஷிகளாய் நாணமுறத் தலைகுனிந்து நிற்கக் கண்டுளோம்.

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்" என்ற தேவர் வாக்கு பெண்களுக்கு ஒவ்வாதோ!

6. கணக்கு வகைகளில், குடித்தனப் பாங்கு இன்னதெனத் தெரிந்து வரும்படிக்கேற்ற செலவு சிக்கனமாகச் செய்யவும், குடும்பத்திற்குரிய வரவு செலவு கணக்குகளைப் பதியவும் தெரியவேண்டிய தவசியம்.

7. தாய்மார்களுடன் கலந்து சமைய லறையில் அவர்களுக்கு ஒத்தாசையாயிருந்து சிறுகச் சிறுகச் சமையல் வேலையில் தேர்ச்சியடைய வேண்டும். நள மகாராஜனும் சமையலில் தேர்ச்சி பெற்றானென்றால், பெண்களுக்குச் சொல்லவும் வேண்டுமா!

அநேக நாரீமணிகள் செல்வப் பெண்களாய் வளர்ந்து மணமடைந்தபின் புக்ககத்திற்குச் சென்று சாதம்வடிக்கத் தெரியாமல் வடிகஞ்சியைக் கையில் ஊற்றிக் கொண்டதினால் கை கொப்புளிக்க, மாமி, நாத்திமார், அண்டை அயல் வீட்டார் "இதுவும் தெரியாமலா அம்மா நீ இதுவரை வளர்ந்தாய்" என நெட்டொடிக்க மனம் புண்ணாகிச் செய்வதின்னதென்று தெரியாமல் சிந்தைகலங்கி விழிப்பதையும் நாம் பார்த்துள்ளோம்.

8. வீட்டுவேலை முடிந்தபின், போஜனத்திற்கு முன் மெய்குளித்து ஆடையுடுத்திப் பொட்டிட்டு, தம் இஷ்டதெய்வங்களை அர்ச்சித்து பூஜிக்க வேண்டும்.

9. பெண்களுக்கு இனியகுரல் இயற்கையிலேயே அமைப்பு ஆனது பற்றிப் பூஜிக்குங்கால், தேவாரம், திருவாசகம், திருவருட்பா, தாயுமான சுவாமி பாடல்கள், இவற்றை இனிய கீதத்துடன் பாடி ஸ்மரித்தல் வேண்டும்.

அதைவிட்டு, ச,ரி,க,ம,ப,த,நி என்கிற சப்தஸ்வரங்களுடன் ஆர்மோனிய முதலிய வாத்தியங்களை அயலானைக் கொண்டு பயில்விப்பது, அச்சம், மடம், நாணம், பயிர்ப்பென்னும் நால்வகைக் குணங்களையு மறவேயொழித்து அம்பலங்களில் நடித்து ஆடவரை மயக்கி, காசைப் பறித்து அநேக குடிகளை நாசமாக்கும் வேசியர் செயற் கொப்பா மன்றோ!

10. தையல் வேலைகளில் பயிற்சியடையவும், இரவிக்கை முதலியவைகளைத் தாங்களே தைத்துக்கொள்ளவும், கிழிந்த ஆடைகளை ஒழுங்காகத் தைக்கவும், நூல்வகைகளில் சித்திரப் பின்னல்கள் போடவும் தெரிய வேண்டிய தவசியம்.

11. அந்திப் பொழுதிலே, கால் முகங்கழுவி, நெற்றியிலே பொட்டணிந்து, திருவிளக் கேற்றிவைத்துத் திருமகளை நினைந்து கும்பிட வேண்டும்.

12. வேலை முடிந்தபின், இராப்போஜன முண்டு பகவானை நினைத்துப் படுக்கை சென்று மிதமான துயில்கொளல் வேண்டும்.

இத்தகைய கல்விபெற்ற மங்கையை மணந்தவனன்றோ எல்லோராலும் நன்கு மதிக்கப்பட்டு புண்ணியவானும், பாக்கியவானுமென போற்றப்படுவன். அவரில்லமே திருமகள் உறைவிடமாம். அந்நாரீமணியையீன்றோரே சான்றோராம்.

19—11—20 ——— வே. இ. குப்புசாமி.

## "ஆனந்தன் பெருமையும், தமிழின் அருமையும்."

தமிழ் நாட்டுச் சகோதர சகோதரிகாள்:—

இனிமையினு மினிய நம் தமிழ் மொழியானது பல பாஷைகளுக்கும் தாய்ப் பாஷையாய் எவ்விஷயங்களிலும் பயிலப் பெற்றதாய் ஓங்கி நிற்கும் பாஷை யென்பது யாவரும் அங்கீகரிக்கத் தக்கது.

அலைகடலால் சூழப்பெற்ற அவனியின்கண் இத்தகைய நம் தாய் மொழியைப் பண்டைக்காலத்துத் தமிழரசர்கள் பரிபாலித்து வந்ததுபோல் தற்சமயம் நமது காருண்ய பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரும் நீக்கிவிடாது ஆதரித்துவருகிறார்கள். தற்காலம் நமது நாட்டில் ஆண் பெண் இருபாலர்களுக்கும் இன்பமான எளிய வசன நடையில் சாதாரணமாக வாசிக்கத் தகுந்த புஸ்தகங்கள் கிடையா. ஏனென்றால், நமது தமிழிலுள்ள நூல்கள் பெரும்பாலும் காவியங்களாகவே யிருக்கின்றன. வசன நடையில் இரண்டொன்றிருப்பினும் அவைகள் சிற்றின்பத்தைப்பற்றிய கேவலமான கதைகளா யுள்ளன. ஆனால் நமது "ஆனந்தன்" எனும் சஞ்சிகையில் அடங்கி யிருக்கும் அரிய விஷயங்கள் எத்தன்மையன வென்றால், தற்காலத்தில் வெளியாயிருக்கும் பல சாஸ்திரங்களின் கருத்துக்களைத் தழுவியிருப்பது மன்றியும் சீர்கெட்ட நமது தமிழ்ப் பாஷையை விர்த்தியாக்குவதற்கு ஓர் கருவியா யிருக்கிறதும் தவிர, நம் இந்திய நாட்டுச் சகோதர சகோதரிகள் வாசித்து இன்புறும்படியாகவு மிருக்கிறது. இத்தமிழைப்பற்றியே இவ்வாறு எழுதத்தக்க வல்லமை யுடையவர் நம் தேசத்தில் நம்மவர்களுக்குள் சில பேரிருந்தும் கானலில் பெய்த மழைக்குச்சமானமாக உலகத்தாருக்கு இன்பம் தருகின்றிலர். இன்னும் நமது நண்பர்களிற் சிலர் அன்னிய பாஷையாகிய ஆங்கிலத்தில் மிக்க தேர்ச்சி யடைந்தவுடன் தம் சொந்த பாஷையாகிய தமிழைப் பேசுவது தமக்கு அகௌரவமென்று நினைக்கின்றனர். இவ்வித எண்ணமுடைய நண்பர்களின் அறிவீனத்தை என்னென்று சொல்வது? இது நிற்க, நம் 'ஆனந்தபோதினியானது' இம்மானிடப் பிறவிகளின் நன்மையைக் கருதி எடுத்திருக்கும் விடா முயற்சிகளைச் சொல்ல இரண்டாயிரம் நாவுடைய கட்செவி மகிபனான ஆதிசேடனாலும் முடியாதென்றால், என்னால் சொல்லத்தகுமோ? கடந்த 6 வருடங்களாக அரும் பிரயாசையுடன் அநந்தம் சாஸ்திரங்களையும் ஆராய்ச்சி செய்து அநேகம் கற்றறிந்த தமிழறிவாளர்களால் ஒவ்வொரு விஷயத்திலு மடங்கிய ஆழ்ந்த கருத்துகளைக் கொண்டு எழுதியிருக்கும் சங்கதிகளை வாசிக்க வாசிக்க ஆனந்த பரவச முறாதவருமிருப்பரோ?

"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கை பூநாறும் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்" என்றவாறு,

ஒரு மனிதனுக்கு மக்கட்பேறு இல்லாவிடின் அன்னவருக்கு உலகில் எச்செல்வமிருப்பினும் பயனற்றவைகள் என்று ஆன்றோர் கூறியுள்ளார். அத்தன்மையதுபோல் நமது 'ஆனந்தபோதினி' யெனும் இச்சஞ்சிகையைக் கைக்கொள்ளாதார் மேற் சொல்லிய தன்மைகளை யொத்தவராவார் என்பதில் ஐயமில்லை.

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்—என்று

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனாரும் தெரிவித்துள்ளார். ஆதலால் நம் இந்திய நாட்டுச் சகோதர சகோதரிகள் ஒவ்வொருவரும் ஆனந்த போதினி எனும் இச்சஞ்சிகையை அவசியம் வாங்கி வாசித்து வரவேண்டுமென்பது எளியேனுடைய கருத்து.

" தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்குமே யின்று."

சந்திரன் தன்னிட மிருக்கப்பட்ட களங்கமான இருளை நீக்க நினையாது, உலகின் இருளை மேலிருந்து நீக்கும் தன்மைபோல் நமது 'ஆனந்த போதினி' யெனும் இச் சஞ்சிகையானது தன்னுடைய சுயநலத்தைக் கருதாமல் உலகத்தாருடைய பொது நலத்தின் பொருட்டுத் தனது சொல்பமான சந்தாவுடன் உலகமெங்கும் உலாவிவரும். இத்தகைய சஞ்சிகையைக் கண்ணுற்ற சகோதரசகோதரிகள் அனைவோரும் இதை ஆதரித்து வாசித்து இன்புற வேண்டியது அவசியம்.

இச்சஞ்சிகையை அச்சிலிட்டு வருபவர்களுக்கும், இதற்கு அரிய விஷயங்களை யுதவி ஆதரித்து வரும் நண்பர்களுக்கும், சென்ற ஆறுவருட காலமாய் விடாமுயற்சியுடன் நடத்திவரும் பத்திராதிபருக்கும் எனது அன்பார்ந்த வந்தனத்தை மனப்பூர்வமாகத் தெரியப்படுத்துகிறேன். அத்துடன் இதுவரை நடைபெற்று வந்ததுபோல் நீடூழி காலம் நிலைபெற வேண்டிச் சர்வலோக சரண்யனை கடவுளைப் பிரார்த்திக்கிறேன். சுபம்.

M. A. ஸ்ரீனிவாசலு நாயுடு,
முனிசிபல் ஆபீஸ் கிளார்க்கு,
சித்திரக்காரத்தெரு, மதுரை.

---

## தமிழின் பெருமையும், தற்கால நிலைமையும்

(273-வது பக்கத்தொடர்ச்சி.)

வில்லி மகாபாரதம்:-"உற்றது சொன்னு லற்றது பொருந்தும்" என்பது உண்மையுரையன்றோ? அஃதேபோல் வனவாசகாலத்து, அமித்திரரது நெல்லிக்கனியை அருச்சுனன் திரௌபதி இஷ்டப்படி பறித்துக்கொடுக்க அவரது சாபத்தினின்றும் நீங்கும் வண்ணம், ஒவ்வொருவரையும் உள்ளதை யுரைக்கும்படி வாசுதேவன் கேட்க, சகாதேவனது முறையில் அவன்,

" ஒருமொழி யன்னை வரம்பிலா ஞான முற்பவ காரண னென்றும்
தருமமே துணைவன் கருணையே தோழன் சாந்தமே நலனுறு தாரம்
அரியதிண் பொறையே மைந்தன்மற் றிந்த வறுவரு மல்லதா ருறவென்
றிருவரி விளையோன் மொழிந்தனன் தன்பே ரிதயமா மலர்க்கிடை
[யெடுத்தே

என்றான். இச்செய்யுளால் ஒருவனுக்கு உள்ள சுற்றத்தார், பெண்டீர் மக்கள் என வழங்கும் பாந்தவ்விய மெல்லாம் மேற்கண்ட குணங்களே யாகும். அச்சுற்றத்தாரே சுத்றத்தாரல்லாமல் உலகிலிருந்து மறையுஞ் சுற்றத்தார் சுற்றத்தார் அல்லர் என விளங்கும்.

நைடதம்:—நைடதத்தில் ஏதேனும் உளதோ வெனில் புலவர்க்கு ஔடத மாகிய நைடதத்தில் இல்லாமலிருக்குமா?

பாளைவாய் கமுகிற் றூவிப் படுபழம் சிதறி வாளை
தாளதா மரையிற் றுஞ்சும் தண்பணை நிடத நாட்டின்
நீர்வளங் கேட்பாள் போலத் தூதர்பால் நிருபர் சீர்கேட்
டாளிமொய்ம் பனையே யெண்ணி அணிமுலை நோக்கிச் சோரும்''

என்றதை யெடுத்துக்கொள்வாம். இதின் கண் தமயந்திக்குண்டாகிய தசாவஸ்தைகளில் ஐந்தாவதாகிய காமவிரகத்தைக் கூறுகின்றது. தமயந்தியானவள் மனதின் கண் நளனையே மணவாளனாக இருத்திக் கொண்டமையால் அவனைப்பற்றி யாராவது சொன்னால் அஃதின் மூலமாகக் கேட்டாவது ஆனந்தமடையலாம் என உன்னி, தகப்பனாரது அவைக்குப் போனால் ஒற்றர்கள் வந்து தகப்பனாரிடம், நீரோடையிலுள்ள வாளை மீன்கள், கமுகுமரத்தின் பாளையின் வாய்த்தொங்கும் சிவந்தபழத்தின் மீதுதாவி மீண்டு ஜலத்தில் விழ, அவ்வாளை மீன்மீது செவ்வனே பழுத்த பழங்கள் விழப்பெற்று, தேகவலி யடைந்து சிரமபரிகாரத்திற்காகத் தாமரைப் பூவின் கண் துஞ்சும்படியான தண்ணீரால் சூழ்ந்த கழனிகளுடை நிடத நாட்டினது மாட்சிமை பெற்ற வளமையைக் கேட்பவள் போல நிருபனாகிய நளனது செயலைக்கேட்டு சிம்மத்தை யொப்பவனாகிய அவனை யெண்ணி ஆபரணமணிந்த தனங்களைப்பார்த்துச் சோருவாளாம். அதாவது தனங்களை நோக்குதலால் அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு எனக்கூறும் நான்கு குணங்களில் அவனது சீரைக்கேட்ட மாத்திரத்திலேயே நாணங்கொண்டாள் என்பதாம்.

**திருவிளையாடல் புராணம்:-** திருவிளையாடல் புராணத்தில் எடுத்துக் கொண்டால் தனபதிக்குப் பிள்ளையின்றி அவன் தனது தங்கையின் பிள்ளையைச் சுவீகாரப்புத்திரனாயடைந்து, தனது செல்வத்தை மருமகனுக்கே கொடுத்து, தான் காடுசெல்ல, அச்சொத்தை யெல்லாம் தாயத்தார்கள் வவ்வ அப்பிள்ளையின் துயருக்கிரங்கி மன்றின்கண் சோமசுந்தரப் பெருமான் தனபதி வேடம் பூண்டு வருங்காலத்து அவர் தம்திருவாயினின்று, மிக்க வருத்தத்துடன் "அரசனிங்கில்லை கொல்லோ வான்றவரில்லை கொல்லோ - குரை கழல் வேந்தன் செங்கோல் கொடியதோ கோதில் நூல்கள்-உரை செய்யுந் தெய்வந்தானு மில்லைகொல் லுறுதியான - தருமமெங்கொளித்ததே கொல் என்று சொல்லி நுழைந்தார். இதனது அர்த்தம் என்ன கூறலாம். இதனால் அரசனது நீதியும், பெரியோர்களுடைய தன்மையும், செங்கோலின் மாட்சியும், தெய்வ சாந்நித்தியமும், தருமத்தின் பெருமையும், எதிர் மறைப் பொருளாக நின்று விளங்குகிறதன்றோ.

**திருத்தொண்டர் புராணம்:—** மனுச்சோழன் மகனான வீதி விடங்கப் பெருமான் தியாகேசரது தரிசனத்துக்காக இரதமூர்ந்து அரசுலாம் வீதியில் செல்லுங்கால், ஓர் ஆவின்கன்றானது ஒருவருமறியாவகையில், தற்செயலாய்ச் சகடத்தில் அகப்பட்டுமாள, அதைக்கண்ட தாய்ப்பசு இரங்குவதைப்பார்த்த வீதி விடங்கனது நிலைமையை யுரைக்கப்புகுந்தவர்,

"அலறுபே ராவை நோக்கி யாருயிர் பதைத்துச் சோரும்
நிலமிசைக் கன்றை நோக்கி நெடிதுயிர்த் திரங்கி நிற்கு
மலர்தலை யுலகங் காக்கு மனுவெனு மென்கோ மானுக்
குலகிலிப் பழிவந் தெய்தப் பிறந்தவா வொருவன் என்பான்''

என அவனை அஃறிணையாக மதித்துக் கூறியதனால் இப்பசுவின் கண் அவனது ஜீவகாருணியம் உள்ளகுணம் உள்ளங்கை நெல்லிக்கனியை யொக்கும்; மற்றும் பழிக்கஞ்சியதையும் விரிக்கும்.

அரிச்சந்திர புராணம்:—அரிச்சந்திரன் கோசிகமுனிக்குத் தன்னுடை நகர மெல்லாமீந்தும் தன் மனைவி மக்களையும் அடிமையாக்கித் தானும் புலையனுக் காட்பட்டும், மகனிறக்கவும், தன் மனைவி கொடிய நீலியெனக் காசிராஜன், அவளைக் கொல்ல ஒப்புவித்து, அவனே வெட்ட நேரிட்ட காலத்து அம்மாது சிரோன்மணி, சத்தியம் தவறாத அவனை நோக்கி, இருவருமாகப்

"பதி யிழந்தனம் பாலனை யிழந்தனம் படைத்த
நிதி யிழந்தன மினிநமக் குளதென நினைக்கும்
கதி யிழக்கினும் கட்டுரை யிழக்கிலே மென்றார்
மதி யிழந்துதன் வாயிழந்த வருந்தவன் மறைந்தான் "

என்று கூறப்படுகிறது. இதனால் இவர்களின் வாய்மையினுதிறயும், மனோவலியும் நன்கு புலப்படுதலுடன் இவர்கள் இனி வருவோருக்கும் சத்தியத்திற்கு உதாரண மானார்களன்றோ?

குசேலோபாக்கியானம்:—வறுமையால் பீடிக்கப்பட்டு, மனைவியாரது வேண்டுகோளுக்கிரங்கி துவாரகை சென்று ஆண்டு வாயிலோர் பால கிருட்டினனுக்குத் தெரிவிப்ப, அம்மாயோன்தானும் அவரும் இளமையிற் சாந்தீப முனிவரிடத்து ஒரு காலை மாணக்கராகப் பயின்ற நட்பின் மிகுதியால் "தாயது வரவு கேட்ட தனி யிளங்குழவிபோன்று - நேய மிக்குடை யோனாகி நெஞ்சினு ளுவகைபூப்பப் போயழைத்திடுமி னின்னே போயழைத்திடுமி னின்னே போயழைத்திடுமி னின்னே" என விரை பொருளிற் புகன்றுகொண்டே தானே வந்தனன் ஆனால் இவர்களது நட்பை நம்மால் இயம்பவும் முடியுமோ.

திருக்குறள்:—இஃதின் பெருமையை யார்தா னுரைக்கவல்லார். இனிமையாகவும் மிகச் சுருக்கமாகவும் அரும் பொருள்களை யுள்ளடக்கியிருப்பது மன்றி, எம்மதத்திற்கும் சம்மதமானதால் மிக்க விசேஷிக்கப்பெற்றது. இதைப்பற்றிய திருவள்ளுவர் மாலை என்னும் நூலுமுண்டு. இடைக்காடர் இதன் பெருமை யுரைக்க ஆவல்கொண்டு,

" கடுகைத் துளைத்து எழு கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள்." என்றார். ஔவை அதை மறுத்து,

" அணுவைத் துளைத்து எழு கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள்," என்றமையின் இதன் பெருமையும்,

இனிமையும் விளங்கும்; எனினும் ஒரு குறளை எடுத்துக் கொள்வாம்.

"நன்றிக் குரித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்கம்
என்று மிடும்பை தரும்."

இதன் கண் நல்லொழுக்கத்தின் மாட்சிமையும் பயனும் நன்கு விளங்குவதன்றி, கெட்ட வொழுக்கத்தின் கேடு விளைவும் விளங்கினும், நல்லொழுக்கத்தின் கண் நிற்பார்களின் மகிமையை யார் சொல்லமுடியும்.

நளவெண்பா:—புகழேந்திப் புலவர் இயற்றிய நளவெண்பா வென்னும் நூலின்கண் ஒரு செய்யுளை யெடுத்துக்கொண்டு ஆராயுங் காலத்து,

"மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னம் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று." என்ற செய்யுளை

யெடுத்துக் கொள்வாம். இந்த விடத்தில் புகழேந்திப் புலவர் சுயம் வர மண்டபத்தை ஓர் வாவியாகவும், மன்னர்களது திறந்து விளங்கும் நேத்திரங்களையே மலர்ந்த தாமரைப் புட்பங்களாகவும், இத்தகைமையான தாமரை வாவியில் தமயந்தி யென்னும் செய்யதாளுடை அன்னமானது புக்கதென்றும் வர்ணித் துரைத்ததைக் கேட்கக் கேட்க எவ்வளவு ஆனந்தம் பெருகுகிறது. இன்னும் பல நூற்கள் உள. ஆனால் ஒவ்வொன்றையும் எடுத்துப் பார்த்தால் ஒவ்வொன்றிலும் விநோதங்கள் உள. சீவக சிந்தாமணி, மணிமேகலை, குண்டலகேசி, சிலப்பதிகாரம், வளையாபதி, என்னும் பெரும் பஞ்சமகா காவியங்களும், பதிற்றுப்பத்து, திருவாரூருலா, சீகபதி, சீகாளத்தி, சிதம்பரம், திருப்பெருந்துறை, திருவாரூர் முதலிய தலபுராணங்கள் ஒவ்வொன்றையு மாராயுமிடத்து ஒவ்வொன்றிலும் இனிய பொருள்கள் அமைந்துள்ள கவிகளேயுள. விரித்துப் பார்க்கப் பார்க்க செவிகள் அமிர்தம் மாந்தியனபோல் இருக்கும் என்று சொல்லாமலே விளங்குறும்.

ஆத்திசூடி:—இனி நாம் மிக்க சிறு நூல் எனக் கருதும் ஆத்திசூடியில் ஒன்றை யுதாரணமாக வெடுத்துக்கொண்டு ஆராய்வோம். முதல் வாக்கியத்தையே எடுத்துக் கொள்வாம்.

அது, "அறஞ்செய விரும்பு" என்பதே யாகும். இதன் பொருளையுணருமுன், இந்நூலின் தன்மையையும், காப்புச் செய்யுளின் விசேடத்தையும் பற்றி ஆராய்வாம்; இந்நூலானது சிறு வாக்கியங்களால் அமைக்கப்பட்டது. இஃதின் கண் உள்ள வாக்கியங்கள் எல்லாம் நீதிமொழிகளின் தன்மையைப் பெற்றன. சிறு வாக்கியங்களே எனினும் சொற்சுவை பொருட்சுவை நிறையப்பெற்றன. இந்நூலின் பொருள்களே மற்றவற்றில் விருத்தியாக்கிக் கூறப்பட்டுள்ளன. மற்றும், இந்நூலின் காப்புச் செய்யுளின் வியப்பான பொருள்களைப் பாருங்கள்.

"ஆத்திசூடி யமர்ந்த தேவனை
யேத்தி யேத்தித் தொழுவோம் யாமே."

அதாவது ஆத்திப்பூமாலை சூடும் சிவபெருமானால் விரும்பப்பட்ட குமரனை விநாயகரது பாத கமலத்தைப் போற்றிப் புகழ்ந்து தொழுவோமாக என்பதாம். இஃதின்கண் நூலின் பெயரையுங் குறிக்கலாயிற்று. இனி எடுத்த வாக்கியத்தின் பொருளோ விளங்கும். எற்கனவே இதனது விருத்திதான் மற்றது என வுரைத்தனன். ஆதலால் வேறு கூறவேண்டியதிலது. இஃதையே யிரண்டடியால் கூறியதைமட்டும் கூறுவேன். அதாவது,

"ஒல்லும் வகையா லறவினை யோவாதே
செல்லும் வாயெலாம் செயல்" எனுங் குறளுளது. இவ்வாறு

அரும் பொருட்களை சிறியது முதற் பெரியவை யீறாக வருத்துரைக்கும் பாடை எது? அர்த்த புஷ்டியும், சொற்சுவையு முடைய பாடை எது? ஆராயுங் காலத்து, ஆரியமும் தமிழுமின்றி, வேறுளதோ? இல்லை என்பது வெளிப்படை அன்றோ. ஆகையால் தத்தம் தாய் மொழியாகிய தமிழ்ப்பாஷை எத்தன்மைத்து என்பதை இனியாகிலும் சிந்தியுங்கள். தற்கால நிலைமை மிகச் சீர்குலைந்திருக்கிறது, அதனையும் மொழிகிறேன். செவி சாய்க்க வேண்டுகிறேன்.

தற்கால நிலை:—இதுபோழ்து தமிழின் நிலைமையைப் பார்த்தால் மிக்க வருத்த முண்டாகிறதென்பது பொய்யாகுமா? நமது தெய்வத் தன்மை வாய்ந்த 'நன்னூற்களையுடைய, தமிழின் பெருமையை மறந்து, பழைய வொழுக்கங்களை விட்டு நவீன நாகரீகமாகிய, வஞ்சகம், பொறாமை யில்லாமை, பொறுமை முதலிய தீய வொழுக்கங்களுக்குப் பீடிகையான மாயையினால் கவரப்பட்டு உழலும் நாம் பராமுகஞ் செய்யின் என் தமிழணங்கு துஞ்சாள்? இது கால மட்டும் அவள் அன்பர்களின் நாவில் நின்று, உலகப் பிரவிர்த்தியில் இருக்கவில்லையா? அத்தகைய அன்பர்கள் இது காலத்தி லில்லையா? இருக்கிறார்கள்.' ஆனால் அவர்களை நாம் எவ்வாறு கருதுகிறோம்? "பழைய பஞ்சாங்கம்" எனக்கருதுகிறோம். நாம் கருதுகிறோமா, வேறு ஏதாவது தூண்டுகிறதா? நாமல்ல, நவீன நாகரீகம். நவீன நாகரீகத்தை யெவ்வாறு கற்றோம்? மேற்குத் தேயத்தின் பாஷையால். அது எத்தன்மைத்து? நம் பாஷைக்குச் சமமானதல்ல. உயர்வாகிய நம் பாஷையை விடப் பின் காரணமென்ன? ஆங்கில பிரசங்கம். அவர்கள் நம்மைத் தடுக்கிறார்களா? இல்லை. பின்னேன்? உதாரத்தின் பொருட்டு. இதனால் விளையும் தீங்குஎன்ன? அரசாங்கவிஷயமாய்ப் புத்தி யேற்பட வேற்பட அயலரசர்களை வென்று ராஜ்ஜியத்தைச் சேகரிக்கவும், பொருளீட்டவும், பாப கர்மங்களைப் புரியவும், நாஸ்திக வாதம் செய்யவும் ஏது விளைகின்றது. அதனால், நாம் என்ன செய்யவேண்டியது? இவைகளைத் தள்ளல் வேண்டும். பிறகு என்ன செய்யவேண்டும்? "மாதாவை ஒருநாளும் மறக்க வேண்டாம்" என்ற வண்ணம், நம் தமிழ்த் தாயின் நிலைமை யறியவேண்டும்.

இனி நாம் செய்யவேண்டிய கடமையும் முடிவுரையும்:—மாதாவை மறவாது என்ன செய்தல் வேண்டும்? போற்றவேண்டும். எவ்வாறு போற்றவேண்டும்? தற்காலத்திற்கு ஏற்ப, அரும்பெருங் காவியங்களைப் படித்து நாம், (அல்லது படித்தவர்கள்) அவ்வக்காவியங்களின் சரிதைகளை, கவிதாவின் கருத்திற்கு இணங்க,நீதிச்செய்யுட்டிரட்டாக்கிப் பைசா விலைக்கு விற்றால் செலவு ஆகும் வண்ணம் புத்தகங்கள் எழுதி அவற்றின் மூலமாய்ப் பாமரர்கள், கற்றுங் கல்லாதவர்கள், மாதுர்த்துரோகிகள் ஆகிய இவர்களுக்குக் கருத்தை விளக்கிக்காட்டி, அவர்களை நல்ல வழிக்குத் திருப்பவேண்டும். பைசா விலைக்குப் போகும்வண்ணம் எழுதுவானேன்? அவைகள் அவ்வளவுதான் பெறுமோ? அவைகளின் மதிப்பு அளவிடமுடியாது. எனினும், பைபில்கள் (Bibles) ஏன் பரவுகின்றது என்றாலோசித்தால், குறைந்த விலையே காரணம். மற்றும் திருக்குறளை, ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த பிறகு 25 ரூபாய் கொடுத்து வாங்கிப் படித்தால்தான் நம் தாயின் குணம் விளங்குமோ? அஃதையே ஒரு அணாவுக்கு மூலம் உரை

யுடனே வாங்கிப்படித்தால் விளங்காதோ? ஆதலால், பின் சொன்னதே மேலானது. அதனுல் பாஷையும் பரவி, முன்னிருந்த நிலைக்கு வரும். ஆதலால் நாம் இப்பொழுது என்ன செய்யவேண்டும்? மாதாவை மறவாது அவளது திருக்கலியாண குணங்களைக் கேட்டானந்தித்து, அவளது நூற்களை பய பக்தியோடு படித்து, மேற்சொன்னது போல் உதவி புரிந்து, முன்னிருந்த நிலைக்குக் கொணர்ந்திட்டு, அவளுக்குச் சந்தோஷமுண்டாக்கி, அவளால் நன் காசீர்வதிக்கப்பெற்று நீடூழி தமிழ்த் தொண்டர் எனப்போற்ற வாழ்வோமாக—சுபம்.

R. S. சாம்பசிவ சர்மன்,
தமிழ்த்தொண்டன்.

---

## தாயுமானவர் சரிதை

நமது சஞ்சிகையில் வெளியிடப்பட்டிருந்த தாயுமான சுவாமிகளின் சரிதையில் அவர் பரிபூரண மடைந்தது தை மாதம் பௌர்ணமி விசாக நக்ஷத்திரம் கூடிய தினத்தன்று என்று கூறியுள்ளோம். இரண்டொருவர், தை மாதம் பௌர்ணமி திதியோடு விசாக நக்ஷத்திரம் ஒரு போதும் கூடி வராதென வரைந்துள்ளார்கள்.

மேலே கூறியுள்ளது நாமே உத்தேசித்துக் கொண்டதல்ல. சுவாமிகள் பரிபூரண தசை யடைந்த காலத்திலிருந்த மகான்களில் ஒருவரான கோடிக்கரை ஞானியார் பாடியருளிய சரமகவியில் அவ்வாறு கூறப்பட்டுளது (கார்த்திகைமீ "ஆனந்தபோதினி" 167-ம் பக்கம் பார்க்க). இச்சந்தேகம் நிவர்த்தியாகத் தாயுமான சுவாமிகள் அடைந்த காலம் வேறு தினமாக வுளதேல், அந்த யறிந்தோர் தக்க ஆதாரத்தோடு தெரிவிப்பார்களாயின் அவர்களுக்கு மிக்க நன்றி பாராட்டுவோம்.

பத்திரிகாசிரியர்

---

## கைவல்ய நவநீத வசனம்.

(269-ம் பக்கத் தொடர்ச்சி.)

[ஜீவன் முத்தன் விவகாரங்களைச் செய்து கொண்டே சமாதி நிலையில் இருக்கலாகு மென்பதைத் திருட்டாந்த பூர்வமாக விளக்கியருளிய ஆசான், சீடனுக்குத் திடஞானத்தை நன்கு விளக்கும் பொருட்டு அவனுக்குத் தோன்றக்கூடிய ஐயத்தைத் தாமே வெளியிட்டு அதற்குச் சமாதானம் கூறுகிறார்.]

குரு:—மைந்தனே! "ஜீவன் முக்தன் தேக சம்மந்தமான அபிமானங் களை அற்றவன். அதாவது, தனக்கு ஸ்தூல ஸூக்கும மாதி தேகங்களின் சம்பந்தமிருக்கிற தென்ற உணர்ச்சியும், நான் பிராம்மணன், க்ஷத்திரியன் என்பது முதலிய தேக சம்பந்தமான அபிமானம் முதலியவைகளும் அற்றவன். தொழிலற்றவன்; அதாவது, நான் இதைச் செய்கிறேன் என்ற அபிமான மற்றவன்; தான் ஜீவன் என்ற பாவமின்றி தன்னைப் பிரம்மம் என்று தெளிந்து, அந்தப் பிரம்ம சாக்ஷாத்கார நிலையில் நிற்ப

வன். அப்படிப்பட்ட ஜீவன் முக்தன் போகங்களைப் புசிக்கிறான் என்றால், அப்போது ஒரு தொழிலைச் செய்யும் கர்த்தாவும், போகத்தையுண்ணும் போக்தாவும் ஆகின்றானல்லவோ? பரிபூரணப் பிரம்மமே தானாயிருப்பவனும் அகர்த்தனுமாகிய ஜீவன் முத்தனுக்குப் பிராரப்தபோகம் ஏது? இச்சந்தேகத்தை நீக்கி யருளவேண்டும்" என்று கேட்பாயாயின் கூறுகிறோம். மகிமையுடைய அச்சீவன் முக்தர்கள் மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி என் மூன்று வகையான இலட்சணங்களை யுடையவர்களாக விருப்பார்கள்.

(மாகர்த்தன் முதலிய மூவரின் இலக்கணங் கூறல்):—

இவற்றில்,

மாகர்த்தன்.—"தானே ஒன்றைச் செய்யுந் தன்மையும், செய்விக்கும் தன்மையும் தான் உடைத்தாயில்லாம லிருக்கும் ஒரு காந்தக்கல் மலையின் முன்னே ஊசிகள் முதலிய இரும்புவஸ்துக்கள் சலனமடைகின்றன. அது போல், செய்கையும், செய்விக்கையுமற்று (சாக்ஷி மாத்திரமாக) இருக்கும் (ஆத்ம சொரூபமாகிய) என் முன் சடமாகிய உலகங்களெல்லாம் வியவகாரங்களைச் செய்துகொண் டிருக்கின்றன. ஆனால் நானோ, தன் சந்நிதான விசேடத்தால் உலகிலுள்ள பொருள்கள் (நீரிலுள்ள மொக்கு மலர்தல், தரையிலுள்ள மலர் வாடுதல், ஜலம் நீராவியாக மாறுதல், பனி அழிதல் முதலிய) நானாவித விகாரங்களை அடையினும், தான் யாவற்றிலும் தாக்கற்று சாக்ஷி மாத்திரமாகப் பிரகாசியா நிற்கும் ஆதித்தன் போன்று, தேகசம்மந்தமான இந்திரிய விவகாரங்களுக்கும், மனோ விருத்திக்கும் பிரம்ம சம்பந்தமான சமாதிக்கும் சாக்ஷியாக மாத்திரமே யிருக்கிறேன் என்ற திட அநுபவ முடையவனே அகண்டானுபவத்திதிலிருக்கும் மாகர்த்தன் எனப்படுவான்.

மாபோகி.—காட்டில் தீப்பற்றினால் இது சந்தன மரம், இது எட்டி மரம், இது பச்சை மரம், இது உலர்ந்தமரம் என்று ஒரு பேதமும் பாராது எட்டியவற்றை யெல்லாம் தகிப்பது போல், உண்ணும் பொருள்களில் குணமுள்ள தென்றும், குற்றமுள்ள தென்றும், அறுசுவைகளில் இன்னின்ன சுவையுடைய தென்றும், சுத்தமான தென்றும், அசுத்தமான தென்றும் பகுத்துணராமல், பொறுமையோடு தனக்குக் கிடைத்ததைப் புசிப்பவன் மாபோகியாகும்.

மாத்தியாகி.—சிறிது பெரிது, தன்னுடையது பிறருடையது என்ற பேதமின்றி, நன்மை வரினும் தீமைவரினும் எதிலும் தாக்கற் றிருப்பவனே மாத்தியாகி யாகும்.

மாகர்த்தன், மாபோகி, மாத்தியாகி என்ற இம்மூன்று வித விரதமுடையவர்களே மோக்ஷத்தை யுடையவர்க ளாவர்.

[ஞானி பிராரப்த வினைப்படி கருமங்களைச் செய்பவனாகவும், போகங்களைப் புசிப்பவனாகவும், உலக விஷயங்களில் சம்பந்தித் திருப்பவனாகவும் காணப்படினும், உண்மையில், அவன் ஒன்றைச் செய்யும் கர்த்தாவுமல்ல; போகத்தைப் புசிக்கும் போக்தாவுமல்ல; யாவற்றிலும் தாக்

கற்று, சூரியன் போல் சர்வ சாக்ஷி மாத்திரமாக விருப்பவன் என்பதாம். அதாவது, ஞானி நான் என்ப தற்றிருப்பவ னாதலால், அவனது ஆன்ம திருஷ்டியில் ஒன்றைச் செய்தல், செய்வித்தல், ஒன்றை யனுபவித்தல், ஒன்றில் சம்மந்தப்பட்டிருத்தல் முதலிய பாவனைகளில்லை. இதனாலேதான் அவனிடம் கர்மம் பற்றுவ தின்றாம்.]

(உலகத்தாரைப்போல் ஞானியும் தொழில் செய்யின், அவன் தொழிலற்றவனென்று எப்படி கூறுவது என்று சீடன் சங்கித்தல்.)

சீடன்.—"ஞானாசிரியரே! வினைப்போகமாகிய தேகத்தைத் தரித்துக்கொண்டும், பிராரப்தமாகிய விதியின் அமைப்பிற்கு இணங்கிக்கொண்டும், சீவித்துக் கொண்டிருக்க வேண்டுமென்ற எண்ணமுடைய கருமகாண்டிகளாகிய உலகோர்க்கு அநுகூலமாகப் பொருந்துகின்ற கருமங்களைச் செய்துகொண்டு மிருக்க, அந்த ஞானியைச் செய்யவேண்டிய யாவும் செய்து முடித்த கிருத கிருத்தியன் என்று எப்படி கூறுவதோ அடியேனுக்கு விளங்கவில்லை. இச்சந்தேகத்தைத் தயை புரிந்து விலக்கியருளப் பிரார்த்திக்கிறேன்" என்றான்.

ஆசான்.—அஞ்ஞானத்தோடு பொருந்தி யிருக்குங் காலையில் ஆடவர்கள் செய்யுந் தொழில் மூன்று வகையாகும்: அவை (1) உலகபோகங்களை யனுபவிப்பதற்கு அவசியமான உழவு, வாணியம், சேவகம் முதலிய இலௌகிகத் தொழில்கள். (2) பரலோக போகங்களை யனுபவிக்கக் கருதிச் செய்யும் தரும கைங்கரியங்கள், யாகாதி எக்கியங்கள் முதலியன. (3) ஞானத்தை யடைய விரும்பிச்செய்யும் சாத்திர ஆராய்ச்சி, சிரவண மனனாதிகள் முதலியன. மண், பெண் பொன் என்ற மூவாசையும், யான் எனது என்ற அகங்கார மமகாரங்களும் உடையவர்களுக்கே இகலோகபரலோக விவகாரங்களாகிய முதல் இரண்டுவிதத் தொழில்களும் வேண்டும். நித்தியா நித்திய விவேகத்தால் இகலோக பரலோக போகங்களில் விரக்தியடைந்து, நித்தியமாகிய மோக்ஷத்தை யடையவேண்டு மென்ற எண்ணமுடையோர்க்கே மூன்றாவதாகிய சாத்திர ஆராய்ச்சி சிரவண மனனாதிகள் முதலியவை வேண்டும். ஞானமுதித்துப் பிரம்மமே தாமானவர்களுக்கு இம்மூவகைத் தொழில்களாலும் ஒரு பயனுமில்லை.

சீடன்.—பரமாசாரியரே! தாங்கள் கூறியது ஒப்பத்தக்கதே. இகலோக பரலோக போகங்களில் விரக்தி வந்தவர்கள்தானே மெய்ஞ்ஞானத்தில் பழக முயல்வர்கள். அவ்வாறு ஞானநெறியிற் றிரும்பியவர்கள் மறுபடி இகலோக பரலோக கிருத்தியங்களாகிய உழாவதி, எக்கியாதி முதலிய (முதல் இரண்டுவித) கிருத்தியங்களில் பிரவேசிக்க விரும்பார்கள். ஆயினும், சித்தம் அநுபவத்தில் நிலைப்பட ஞானாப்பியாசத்தில் பிரவேசித்தவனும் சிரவண மனனநிதித்தியாசனங்களைச் செய்ய வேண்டாவோ? ("ஞானி ஒரு காரியமும் செய்யாதவ னெனின், இகலோக பரலோக விவகாரங்களைச் செய்யாவிடினும் ஞானம் திடப்படச் சிரவணாதிகளேனும் செய்ய வேண்டாவோ? அப்போ தவனெப்படி தொழிலற்றவனாவான்? என்றபடி).

ஆசான்—தான் பிரம்மமென உணராதவர்கள் சிரவணம் செய்ய வேண்டுவது அவசியமே. சந்தேகங்களை யுடையவர்கள் அச்சந்தேகங்க

ளின் நிவர்த்தியின் பொருட்டு மனனம் செய்யவேண்டுவதே. விபரீதப் பேயென்னும் மலினவாசனை யுடையோர் நிதித்தியாசனம் செய்யவேண்டியதே. அஞ்ஞான மொழிந்து, அறிவு மயமாகிய பரிபூரண சொரூபமே தானாயினோர் செய்யவேண்டியது என்ன விருக்கிறது? ஒன்றுமே யில்லை.

[ஞான அப்பியாசம் செய்வோர் சுயானுபவம் பூரணமாகுமுன், அஞ்ஞான சந்தேக விபரீதங்களாகிய தடைகளை யொழிக்கும் வண்ணம் சிரவணம், மனனம், நிதித்தியாசனங்களைச் செய்யவேண்டியதே. ஆனால் பிரம்ம சாக்ஷாத்காரத்தை யடைந்து சகச சமாதியிலுள்ள ஆரூடர்கள் செய்யவேண்டியது ஒன்றுமே யில்லை என்பதாம்.]

(சீடன் பின்னுமோர் ஐயம் வினவுதல்.)

சீடன்.—பரமாசாரியரே! பிரம்ம ஞானியும், சாதாரணமான அஞ்ஞானிகள் யான் எனது என்ற அகங்கார மமகாரங்களால் கூறுவதுபோல் "செய்தேன், உண்டேன், கண்டேன், சென்றேன், இருந்தேன்" என்று (உலக விவகாரங்களை யுடையவர்கள் போல்) பேசலாமோ? இத்தகைய மித்தையாகிய விபரீத பாவனைகள் இவர்களுக் கில்லையென் றருளினீர்களே! இவர்கள் இப்படிக் கூறுவது உண்மையான பிரம்ம விசாரமல்லவே. இதை யடியேன் தெளிவா யறியும்படிக் கூற வேண்டுகிறேன்.

["அஞ்ஞானிகள் ஜீவபாவ முடையவர்கள். ஆகையால், தாங்கள் கருமங்களைச் செய்வதாகவும், போகங்களைப் புசிப்பதாகவும், அவற்றால் வரும் கர்மங்களை யனுபவிக்கிறவர்களாகவும் மயங்கி யிருப்போர்கள். ஞானிகள் அம்மயக்க நீங்கி சாக்ஷி மாத்திரமாகிய ஆன்ம சொரூபமாகத் தம்மை யுணர்ந்தவர்கள். அவர்களது ஆன்மதிருட்டியில் கருமங்களைச் செய்வதும், போகங்களைப் புசிப்பதுமாகிய உணர்ச்சியேயில்லை. அப்படியிருக்க அவர்களும் அஞ்ஞானிகளைப்போல் "நான் செய்தேன், புசித்தேன், போகிறேன், எடுத்தேன், கொடுத்தேன்" என்று சம்பாஷிக்கிறார்களே. சதா பிரம்மானுபவமாகிய நிஷ்டையி லிருக்கும் இவர்கள் அப்படிக் கூறினால், அஞ்ஞானிகளுக்குள்ள மேற்கண்ட ஜீவபாவம் இவர்களுக் கில்லை யென்று எப்படி கருதுவது?" என்பதே சீடன் கேட்கும் சந்தேகம்.]

குரு.—சொப்பனங் கண்டு விழித்த ஒருவன் தான் கண்ட சொப்பனம் பொய்யென உணர்ந்தானாயினும், சொப்பனத்தில் கண்ட வாசனையால் "நான் வீதியில் சென்றுகொண் டிருந்தேன். எதிரில் ஒரு யானை வரக் கண்டு அலறிக் கூவினேன்" என்கிறான். அப்படி யவன் கூறினும் கண்டது சொப்பனம்; அது முழுமையும் பொய் என்ற உண்மை யறிவு அவனுக்கு இல்லாமற் போகவில்லை. அது போலவே ஆன்ம சொரூபமே தானென் றறிந்த ஞானியும் பூர்வவாசனையால் அப்படி "கண்டேன், உண்டேன், சென்றேன்" என்று கூறுவான். ஆயினும் அவனுக்குள் ஜீவபாவமே யில்லை. பரிபூரணமாகிய பிரம்ம சொரூபமே நாம் என்ற அநுபவமே அவனிட முள்ளது. விதேக கைவல்ய மட்டும் இத்தகைய விவகாரம் தொடரும்.

[ஒரு அரசன் தான் யாசகனாகப் பிச்சையெடுப்பது போலவும், கூலிக்கு மூட்டைதூக்கியது போலவும் கனவுகண்டு, விழித்தபின் அதையப்

படியே கூறுகிறான். அப்படியவன் கூறும்போதே தனக்குள் தான் அரசன் என்று கருதி யிருக்கிறானே யொழிய, பிச்சைக்காரன் என்று கருத மாட்டான். பிராரப்த போகம் ஒழியுமட்டும் தேகம் இருக்கும்; அதுவரை ஞானி யப்படி கண்டேன், கேட்டேன் என்று பேசினும் அவனுக்குள் தான் பிரம்மசொரூபமே யென்ற பாவமேயொழிய சீவபாவம் எள்ளளவு மிராது. அஞ்ஞானி யான் எனது என்ற அபிமானத்தோடு கூறுகிறான். அந்த விவகாரங்கள் அவன் மனதிற் பதிந்திருக்கின்றன. ஞானி தன் மனதில் எதுவும் தாக்காமலே பேச்சுமாத்திரமாக விவகரிப்பவன். அப்போதைக்கப்போது அவை கனவுபோல் போய்விட அவன் எதிலும் தாக்கற்று நிற்கும் ஆகாயம்போல் அகண்ட பிரமசொரூபமாகவே யிருப்பன்.]

(தொடரும்.)

---

## "இச்சந்நியாசிகளினால் யாது பயன்"

சகோதர சகோதரிகளே!

நெடிய கடல் சூழ்ந்த இவ்விந்திய நாட்டின் கண்ணுள்ள முப்பத்து மூன்று கோடி ஜனங்களில் எழுபது லக்ஷம் ஜனங்கள் பண்டாரம், கோடங்கி, சந்நியாஸி என்று மார்க்க வேஷம் பூண்டும், நாற்பத்திரண்டு லக்ஷத்து இருபத்தீராயிரம் ஜனங்கள் யாசகமே தொழிலாக வைத்தும் ஜீவனம் தள்ளுகிறதைக் கவனிக்குங்கால் எந்த இந்தியன் மனம்தான் புண்ணுறாது? அந்தோ! பரிதாபம்; பெற்றோர்க்கடங்காச் சிறுவனும், சம்சாரமென்னும் கப்பலைநடத்தத் தெரியாத மாலுமியும், கடைக்குப்போய் அரையணா கொடுத்துக் காவிவாங்கி வஸ்திரத்தைக் காவியாகச் செய்தும் திருநீற்றை உடலெல்லாம் பூசியும் கையில் ஓடேந்தி சம்போ, சங்கரா, சுப்பிரமணியம், வேலாயுதா, ராமா என்ற பகவன் நாமங்களை வெளிப்பார்வைக்குச் சொல்லிக்கொண்டும், பிச்சை எடுக்கப் புறப்பட்டு விடுகிறார்கள். பிச்சை எடுத்தாலும் ஜாதி வரம்பு பாராமல் இருக்கிறது மில்லை. அரிசி,பணம்தான் முக்கியமாக வாங்குகிறார்கள். உடனே கஞ்சா, அபின், கோலி, கள்ளுக்கடைக்குப்போய்க் காணிக்கை செலுத்திவிட்டு நிர்த்தனம் செய்யவும், வேதாந்தம் பேசவும் செய்கிறார்கள். பரம்பரையாகவே நாங்கள் பிச்சை எடுத்து வருகிறோமென்றும் டம்பம்பேசுகிறார்கள்.

இரவெலாங் காமக்கணிகையர் முயக்கி லின்பமுற்று பகலெல்லாங் குரவராயணி வெண்ணீற்று ருத்திராக்கக் கோல மார்ச்சாலமாங் குழைவும், பரவுபாவனையுந் தேவதார்ச்சனை தாம்பண்ணல் போலுருப் பலப்பரப்பி, விரவுமாமணி தொட்டாட்டலும் பார்க்கின் மிகக் கொடிதிவர் வஞ்சவேடம் என்றபடி, இவ்வஞ்சசந்நியாஸிகளினால் நம் நாட்டுக்கும் க்ஷேமமில்லை; அவர்களுக்கும் மோக்ஷமில்லை. இப்படி கோடிக்கணக்காக இருக்கிற இச் சந்நியாஸிகள், கோடங்கிகள், பண்டாரங்கள் கிருஷிகத் தொழிலைக் கைக்கொண்டால் நம் நாட்டில் வறுமை தீர்ந்தே போகும். பொதுவாக நம்மிந்தியாவில் செவிட்டுமையர் லக்ஷத்து ஐம்பத்தையாயிரம் பேரும், கபோதிகள் மூன்று லக்ஷத்து அறுபதாயிரம்பேரும், குஷ்டரோகிகள் லக்ஷம் பேரும், புத்திபேத முள்ளவர்கள் ஆறுயிரமும் இருக்கிறார்கள். இந்த ஆறு லக்ஷம்பேருக்கும் உதவிபுரிய வேண்டியது நம்மவர் கடமை

களின் முக்கியம். இவர்கள் நீங்கலாக ஏனையோர்களுக்குத் தர்மம் செய்வதில் பெரும் பாபமே நம்மைச் சாரும் என்பது எனது கொள்கை. ஆனுலும் உண்மைச் சன்னியாஸிகள் இல்லாமல் போகவில்லை. ஆகையால், சகோதர சகோதரிகளே! போலிச் சந்நியாஸிகளான திட சரீரமுள்ளவர்களை ஆதரிக்காதேயுங்கள், அவர்கள் ஒரு வேலையும் செய்யாமல் சோம்பல் மேலிட்டு பிச்சை எடுத்து உண்கிறதும் உறங்குகிறதுமாகக் காலங் கழிக்கிருர்கள். உற்சவ காலங்களில் இவர்களுடைய தொந்தரவு அதிகமாக இருக்கிறது. இப்போலிச் சந்நியாஸிகளை எல்லாம் திறட்டி கைத் தொழில்களிலும் விவசாயத்திலும் பழக்கி வைத்தால், நம் நாடு இந்த தரித்திரதசை அடையாது என்பது திண்ணம். தேசாபிமானிகளே கவனியுங்கள்! உங்களுக்கும் இவர்களால் நன்மையுண்டு. அது போலவே அவர்களுக்கும்.

G. S. A. வெங்கிடராம் நாயுடு,
ஸ்ரீ மதுரகவி ஆழ்வார் சபை, ஆத்தூர்.

குறிப்பு:—இக்காலத்தில் உலக போகங்களைக் கொஞ்சகால மனுபவித்தவனுக்கே அவற்றில் விரக்திவருவது கடினமாக விருக்கிறது.

இக்காலத்தில் தக்க ஆசான் ஒருவன் பக்குவமறிந்து ஒருவனுக்குக் காஷாயமளிக்கும் வழக்கமில்லை. சிறுவர்களும் பிரியப்பட்டால் காஷாயம் தரித்துக்கொள்கிருர்கள் - பாலியம் அல்லது யௌவன வயதில் உலகில் அநித்திய புத்தியும் மோட்சவிருப்பமும் தோன்றி சந்நியாசியாவோர் மிக்க அரிது. அப்படியாவோரைப் பற்றி இங்கு கூறப்படவில்லை. ஞானத்தையடைய விரும்புவோன் முன்னே காஷாயந் தரித்துக்கொள்ள வேண்டும் என்ற அவசியமேயில்லை. ஆனுல் "நான் ஒருதொழிலும் செய்யாமல் யாராவது எனக்கு ஆகாரம் அளிக்கவேண்டும்" என்று தெரிவிப்பதற்கே காஷாயம் இத்தகையோர்க்கு உதவியாக விருக்கிறது.

உண்மையான விரக்திஜனித்து ஞானுப்பியாசம் செய்துகொண்டு பசிப்பிணியை யொழிப்பதற்கே, அது வந்துற்றபோது எதிர்ப்பட்டவிடத்தில் கையேந்தி கிடைத்ததை யுண்டு உலகைக் கானல்நீரெனக் கருதி நடக்கும் ஒருவனுக்கும் இவர்களுக்கும் நேர்மாருன பேத மிருக்கிறது.

தேகத்தில் இச்சையும் அபிமானமுமுடைய ஒருவன், வெண்பட்டிற்குக் காஷாயம் ஏற்றிக் கீழேயுடுத்திக்கொண்டு, சுமார் 15, 20 ரூபாமதிப்புள்ள நேர்த்தியான புல்லம்பேட்டை அங்கவஸ்திரத்திற்குக் காஷாயமேற்றி மேலே யணிந்துகொண்டு, காஷாய கிறமான சீனுபட்டில் அங்கிதைத்து அணிந்துகொண்டு, மாலை 4 மணிவெயில்கூட தன் அருமையான தேகத்தில் படாதபடி காஷாய நிறமுடைய பட்டுக்குடை பிடித்துக்கொண்டு, கால் மண்ணில் படாதபடி சித்திரவேலை செய்த வெள்ளிக்குமிழ் வைத்த உயர்ந்த பலாமரப் பாதக்குறடணிந்து கையில் தங்கப் பூண்கட்டிய கோல் பிடித்துச் செல்லும், ஒரு சந்நியாசி எந்த நோக்கங்கொண்டு அக்கோலமணிந்தா ரென்பதை இதை வாசிப்போரே யூகித்துணரலாகும். அந்தோ இத்தகைய சோம்பேறிகளால் உண்மையாய் முமுக்ஷுத்வம்

பொருந்தி சாதுசங்கம், சாத்திர ஆராய்ச்சி, சிரவண மாதிகளிலேயே காலங்கழிக்கும் சந்நியாசிக ளிடத்திலும் உலகோர்க்கு ஐயம் ஜனித்து அவர்களுக்கு உதவி கிடைக்காமற் போகிறது.

இவ்வாறு வேறு காரணமின்றி, உண்மை விரக்தியின்றி யாசகம் செய்து ஜீவிக்க வென்றே வெளிகிளம்பும் வேட சந்நியாசிகளுக்கு உதவி செய்வது நம் தாய்நாட்டிற்குத் தீங்கிழைப்பதேயாகும். அவர்களுக்குச் செய்யும் தர்மம் அபாத்திரத்திற்குச் செய்ததேயாகும். ஆனால் இவர்களின் உண்மையைக் கண்டறியாது எல்லா சந்நியாசிகளையும் அவ்வாறே கருதி அவமதித்துவிட லாகாது.

சந்நியாசிகளில் மட்டுமல்ல இவ்வாறு ஆசாமிகளிருப்பது. நமது நாட்டில் துறவிகள் என்று வெளிவருவோரிலும் சிலர் நாமரூப நாட்டம் விடாமலும், மனச் சலனத்தை யொழிக்காமலும், முக்கால உணர்ச்சியோடும், காலதேச வர்த்தமானங்களில் பூரணமாகப்பதிந்த மனதோடும், உலகோரிலும் ஏழை, செல்வவந்தன், நண்பன், அன்னியன் முதலிய எல்லாபேத உணர்ச்சியோடும், விருப்பு வெறுப்பு, இன்று, நாளை, நன்னாள் தீயநாள், உயர்வு, தாழ்வு முதலிய சகலபேத உணர்வோடும் உலகோரோடு விவகரித்துக் கொண்டே, தங்களைத் துறவிகளென்று உலகம் மதிக்கவேண்டு மென விரும்புகின்றனர். உலகோர்க்கு ஞானமார்க்கத்தைப்போதிப்பதாகிய ஒரு விஷயந்தவிர மற்ற எந்தவிஷயத்திலும் துறவியாகிய ஞானி உலகோரோடு சம்பந்தம் வைத்துக்கொள்ள விரும்பானென்றே ஆன்றோர் அருளியிருக்கின்றனர்.

சிலர் மகான்களுக்குரிய திருநாமங்களை வைத்துக்கொண்டு அந்த ஆசிரமவிதியை மதியாமல், உலகோர்போல் தந்திரமான வழிகளில் பொருள் சம்பாதிக்கவும் முயல்கிறார்கள். அவர்களது நாமம் வேடம் யாவும் அம்முயற்சியால் பணம் சம்பாதிக்கவே உதவியாகின்றன.

உண்மையாகவே நித்தியா நித்திய விவேகம் ஜனித்து ஞான, அப்பியாசம் செய்பவன் தன்னை யறிந்து பிரம்மவரன் பதவியை யடைந்தாலும், வருணாசிரம தருமப்படி நடந்துகொண்டிருப்பான். இல்லறத்தை நீத்துசந்நியாசியாக வெளி கிளம்பின், மறுபடி இலௌகீக விவகாரங்களில் பிரவேசியான். அதற்குமேல் சமாதிநிலை பொருந்தி துறவியாயினோ தனக்காகவாயினும் சரி, உலகோர்க்காக வாயினும் சரி, இலௌகீக விவகாரங்களில் மனதைச் செல்லவிடான். நாமரூப நாட்டம் வைப்பின், வெளிக்கு அவனுடைய நிகழ்கால அற்ப விவகாரங்கள் மட்டும் கனவுபோல் நடக்கினும் அவனுடைய உள் திருஷ்டியில் அகண்டாகார அநுபவமாகிய தன்னையன்றி வேறெவ்விதத் தோற்றவு மிராது என்று ஆன்றோர் அருளியுளர்.

ஆகையால் இத்தகையோர் விஷயத்தில் மிக்க எச்சரிக்கையாக நடந்துகொள்ள வேண்டுவது அவசியமேயாகும். பத்திரிகாசிரியர்.

# அந்தரக்களவு அல்லது தபால் கொள்ளைக்காரர்கள்

(279-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆனந்தஸிங் அதைக் கண்டதே சட்டென்று சுவரோரமே பதுங்கிப் போய் அலமாரியின் பின்னால் பதுங்கிக் கொண்டான். இப்போ இவன் இருக்குமிடத்திற்கும் அவர்களிருக்குமிடத்திற்கும் நான்கு கஜம் கூட இல்லை. இவன் அவர்களை நன்றாய்ப் பார்க்கவும் கூடும். அவர்கள் பேசுவது முழுமையும் கேட்கவுங் கூடும். இடையில் அலமாரி யிருப்பதோடு அவர்கள் இந்தத்திக்கில் முதுகைத் திருப்பிக்கொண் டிருப்பதால் திரும்பினாலும் இவன் அவர்கள் கண்களுக்குப் புலப்படமாட்டான். உடனே அடியிற்கண்ட சம்பாஷணை இவன் செவிகளில் விழுந்தது:—

**சாமிநாதன்:**— அப்படியாயின் நீ யவனைத் தாக்கியதற்காக கைது செய்யப் பட்டு அபராதம் கொடுத்தாய்!

**இரங்கநாதன்:**— ஆம் ஆம்.

சாமிநாதன் ஹா! ஹா! நல்ல வேடிக்கை யிது. பிறகு அவன் அப் பெண்ணைக் கொடுக்கமாட்டே னென்றானோ? என்றான். இரங்கநாதன் ஆம் என்றான்.

**சாமி:**—என்? அந்தப் பெண் நீதான் தந்தை யென்று தெரிந்துகொள்ள வில்லையா? அவன் அறிந்துகொள்ள வில்லையா?

**இரங்க:**—அவன் அவள் என் மகளென்று ருசுப்படுத்தச் சொல்லுகிறான். அப்படி நேரிடும் பட்சத்தில், பழைய விஷயங்களில் ஏதேனும் வெளிவந்து விடின் நம்மிருவருக்கும் ஆபத்தாய் முடியும். ஆகையால் நாம் கொஞ்சகாலம் சந்தடியின்றி இருக்கவேண்டியதே நலம்.

**சாமி:**—ஆம் ஆம். நீ சொல்வதே சரி. நாம் மிக்க ஜாக்கிரதையா யிருக்க வேண்டும். ஆனால், எந்த விதத்திலாவது அப்பெண்ணை நமது கைக்குள் கொண்டுவந்து விடவேண்டும். வயதென்னவென்று கூறினாய்?

**இரங்க:**—பதினைந்து அல்லது பதினாறு.

**சாமி:**—நல்ல அழகுடையவளென் றல்லவா கூறினை?

**இரங்க:**—நீ இதுவரையில் அத்தகைய அழகுடையவளைக் கண்டே யிருக்க மாட்டாய்.

**சாமி:**—"ஆ அப்படியானால் அவள் என்னுடையவளே" என்று மிக்க சந்தோஷத்தோடு ஆரவாரித்தான்.

**இரங்க:**—அதனால் உனக்கு இரண்டு வழியிலும் அனுகூலமுண்டு. நமது எதிர்கால க்ஷேமம் முழுதும் அதைப் பொருந்தியதாக விருக்கிறது.

**சாமி:**—அந்தப் பெண்ணை யெப்படி யிங்கு கொண்டுவருகிறது? உன்னைத் தந்தை யென்று ஒப்புக் கொள்ளமாட்டாள் என்று கூறினையே.

**இரங்க:**—அவள் நல்ல வழியில் வர மறுத்தால் முரட்டு வழியில் கொண்டு வரவேண்டியதே.

அலமாரியின் பின்னால் நின்று கேட்டுக்கொண் டிருக்கும் ஆனந்தஸிங் மேற்கண்ட சம்பாஷணைகளைக் கேட்கக் கேட்கச் சந்தோஷ மடைந்தான்.

அச்சமயம் எதிர்பாராத ஒரு விபத்து நெர்ந்தது. அதாவது ஆனந்த லிங் பதுங்கி யிருந்தபோது அலமாரிமேல் பளுவு தாங்கும்படி சாய்ந் தானே, என்ன காரணமோ தெரியவில்லை; அந்த அலமாரி அடியோடு முன்பக்கம் தடாலென்று சாய்ந்து விட்டது.

அது விழுந்த அதிர்ச்சியால் சம்பாஷித்துக்கொண்டிருந்த இருவரும் நாற்களிலிருந்து மல்லார்ந்தபடி கீழே விழுந்தார்கள். சற்று நேரத்திற்குள் அவர்கள் சமாளித்துக்கொண்டு எழுந்து நின்றதே புத்தக அலமாரி யடியோடு குப்புற விழுந்து கிடப்பதையும், சுவர் ஓரமாய் ஒரு மனிதன் பதுங் கிக்கொண் டிருப்பதையும் கண்டார்கள். அம்மனிதன் விழுந்து கிடக்கும் அலமாரியை யொரு பாய்ச்சலில் தாண்டி மான்குட்டிபோல் அறையை விட்டு வெளிப்பட்டான்.

முதலில் கலவர மொழிந்த இரங்கநாதன் சட்டென்று தன் கைத் துப்பாக்கியை யெடுத்து ஓடுகிறவனை யிரண்டுதரம் சுட்டான். ஒருகுண்டு கூட அவன் மேல் படவில்லை. உடனே வீடெங்கும் பெருங் குழப்ப முண் டாய் விட்டது. துஷ்டரிருவரும் வேலைக்காரர்களைக் கூட்டிக்கொண்டு வீடு தோட்டம் எங்கும் முழுதும் தேடினார்கள். எங்கும் ஆளைக் காணேம்.

எங்கும் தேடிப் பார்த்துவிட்டு ஓய்ந்து இரண்டு கள்ளரும் வந்து மறுபடி அறையில் உட்கார்ந்தபின், இரங்கநாதன் மிக்க பயமடைந்து திகிற்பட்ட முகத்தோடு தன் கூட்டாளியாகிய சாமிநாதனை நோக்கி,

“அவன் யார் தெரியுமா?” என்று கலவரத்தோடு வினவினன்.

சாமி:—தெரியாது. அவன் யாரோ கள்ளப்பயல். அவ்வளவுதானே?

இரங்க:—கள்ளப்பயலா! பத்து தரம் கள்ளப் பயலாயினும் நான் ஒரு துரும்புக்குச் சமதையாய் நினைப்பேன்.

இதைக் கேட்ட சாமிநாதன் பெரிய திகிலடைந்து “அப்படியானல் அவன் யார்?” என்றான்.

இரங்க:—அடடா! அவன் நூறு வேட்டை நாய்களா யிருப்பினும் நான் அஞ்சேன். அவன் நமது ஆலோசனை முழுதும் தெரிந்துகொண் டான். இனியவனை முன்னே, அதுவும் சீக்கிரத்தில், அடியோ டழிக் காவிட்டால் நம்மிருவருக்கும் பிராணபத்தாய் முடியும் என்பதிற் றடையேயில்லை.

இதைக் கேட்டதே சாமிநாதன் பாடு வில விலத்துவிட்டது. அவன் முகம் சவம்போல் வெளுத்து விட்டது. பெருந் திகிலோடு,

“அய்யோ! அவன் யார்? சீக்கிரம் கூறு” என்று ஆத்திரத்தோடு கேட்டான்.

இரங்கநாதன்:—“அவன்றான் நமது நாட்டிற்கு வந்திருக்கும் முதல்தர துப்பறியும் சிங்கமாகிய ஆனந்தலிங் என்பவன்”, என்றான்.

இதைக் கேட்டதே சாமிநாதன் தலைமேல் பேரிடி விழுந்த மாதிரி யாய் விட்டது. “அந்தோ! இனி நாம் தப்புவதில்லை. என்ன செய்வது? நாம் பேசிய விஷயங்களைக் கொண்டே யவன் யாவற்றையும் கண்டு பிடித்து விடுவான்” என்று பிரலாபித்தான். (தொடரும்.)

ஆரணி குப்புசாமி முதலியார்.

# பொது சமாச்சாரங்கள்

## கோரமான மோட்டார் விபத்து.

14-1-1921 மாலை சுமார் 3-30-மணிக்குச் சென்னை "ஸால்ட்கொடார்" என்ற இரயில்வேசாமான் கிடங்கிலுள்ள வெளிச்செல்லும் வாயிற்படியில் வந்துகொண்டிருந்த ஒரு மோட்டார் வண்டியில் ஒரு வாலிபன் அகப்பட்டு மடிந்தான். அவன் அகப்பட்டுக் கொண்ட விவரத்தைச் சுருக்கமாக வெளியிடுகிறோம்:—

அந்த மோடார் வண்டி புதுவண்டி. சுமார் இருபது இருபத்திநான்கு பேர் ஏறும்படியான (வாடகைக்குப் பிரயாணிகளை ஏற்றிச்செல்லும்) வண்டி. அகப்பட்டுக் கொண்டவன் பெற்றோர்க்கு ஒரே புத்திரன். வயது இருபதிருக்கும் - அச்சமயம் அவனோடு வேறு இரண்டு சிநேகரும் இருந்தார்கள். இவர்கள் அந்த வெளிச்செல்லும் வழியேபோகும் போது வண்டியும் உள்ளிருந்துவந்தது. வண்டி நெருங்குவதைக்கண்டு மூவரில் இருவர் ஓடிவிட மேல்கண்ட வாலிபன் வாயிற்படி வாசற்கால்போல் இருந்த கல் கம்பத்தின்மேல் முதுகைவைத்து ஒதுங்கி நின்றான். வாயிற்படியின் அகலம் சுமார் 15 அடி அவன் கம்பத்தில் ஒட்டிக்கொண் டிருந்தும், வண்டி அவன்மேல் தாக்க, அவன் மண்டையில் பலத்தகாயம் பட்டு கோரமான தப்போக்கு நேர்ந்து அங்கிருந்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட, வழியிலேயே மரித்தான்.

வண்டி கல் கம்பத்திற்குப் பக்கத்தில் இரண்டடி இடம் விட்டுச் செல்லலாகாதா? இடச் சந்தர்ப்பத்தை யறிந்து அங்கு மெதுவாக வண்டியை விடலாகாதா? கடவுளே! இந்த மோடார்வண்டிகளால் இச்சென்னையில் அநேக மரணங்கள் நேர்ந்தன. தனவந்தர்களாகிய சிலர் தீவிரமாகச் செல்வதற்காகப் பலர் மாளவேண்டியது இங்கு சாதாரண விளையாட்டாய்விட்டது. மோட்டார் வருமுன் இவர்கள் சாதாரண வண்டிகளில் நிதானமாக சென்று கொண்டிருந்தபோது இவர்கள் காரியங்களனைத்தும் நடைபெறாமல் நின்று கொண்டிருந்தனவோ? அந்தோ! சில மனிதர் தங்களுக்குச் செல்வம் வந்துவிட்டால் பிறர் உயிரைக்கூட ஒரு துரும்புபோல் மதிப்பது இயற்கை. அரசனுக்கு அப்படி யல்லவே.

தன்னுயிர்போல் மன்னுயிரைப் பாதுகாக்க வேண்டிய துரைத்தனத்தார் இன்னமும் இக்குரூரமான பாதகங்களைக் கவனியா திருப்பது அழகாகுமோ! நகரவட்டத்திற்குள், ஓர் குறித்த வேகத்திற்கு அதிகமாக வண்டியை விடலாகாதென்று சட்டம் ஏற்படுத்தினாலொழிய இக்கொலைகள் நிற்கா வென்பது உண்மை, இனியேனும் அதிகாரிகள் இதற்குப்பரிகாரம் தேடுவார்களென்று நம்புகிறோம்.

**புதிய இராஜப் பிரதிநிதி.**—சென்ற சில மாதங்களாய் இந்திய இராஜப் பிரதிநிதியின் ஸ்தானத்துக்கு பற்பல பேர்கள் நியமிக்கப் படப்போவதாய் வதந்திகள் உலாவிவந்தன. கடைசியாய் எவரும் எதிர்பாராத யூத ஜாதியைச்சேர்ந்த பிரபு ஒருவர் நியமிக்கப்பட்டு விட்டார் எனத் தெரிய வருகிறது. இவர் இயற்கைப்பெயர் ரூப ஸ்தானியல் ஐசக்ஸ்; பட்டப் பெயர் லார்டு ரீடிங் காகும். இவர் ஒரு பெரிய நியாயவாதி. இக்காரணம் பற்றி இவர் இந்த தேசத்துக் காரியா காரியங்களை நியாயமான விதமாய் நடத்துவாரென எதிர்பார்க்கலாம். இவர் கொண்ட கருத்தைச் சாதிக்க வல்லவரென்றும், பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அதிக செல்வாக்குள்ளவரென்றும் சொல்லப்படுகிறது. (ந-ன்)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்

## இரௌத்திரி௵ பங்குனி௴—சாலிவாகனம் 1843-கலியுகாதி 5022
## பசலி 1329-30—கோல்லம் 1095-96—ஹிஜரி-1338-39
## இங்கிலீஷ் 1921௵ மார்ச்சு௴—ஏப்ரல்௴

| பங்குனி௴ | மார்ச்சு௴ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | தி | பஞ்40-51 | பர21-47 | சித்-21-ம | சுபகாரியங்கள் |
| 2 | 15 | செ | சவ்ஷ37-8 | கிரு·※·20-6 | சித்-60 | பிரயாணம் |
| 3 | 16 | பு | சப்32-36 | ரோக17-35 | சித்-60 | வித்யாரம்பம் |
| 4 | 17 | வி | அ27-24 | மிரு14-20 | மர-60 | ............... |
| 5 | 18 | வெ | நவ21-47 | திரு10-38 | சித்-60 | கரும்பு கிழங்கு நட |
| 6 | 19 | ச | தச15-49 | புன6-34 | சித்-60 | ஆபரணம் பூண |
| 7 | 20 | ஞா | ஏகா8-20 | பூச2-25<br>ஆயி-55-54 | சித்-60-ம | கிணறு கட்டடம் |
| 8 | 21 | தி | துவா3-54<br>திர54-25 | மக-54-30 | ம-54-சித் | ............... |
| 9 | 22 | செ | சது53-18 | பூர51-16 | சித்-51-அ | பிரயாணம் |
| 10 | 23 | பு | ○ 49-1 | உத்48-45 | அ-48-மர | ............... |
| 11 | 24 | வி | பிர45-32 | ஹஸ்47-3 | சித்-60 | வாகனங் கொள்ள |
| 12 | 25 | வெ | து43-14 | சித்46-25 | சித்-60 | கெர்ப்பாதானம் |
| 13 | 26 | ச | தி41-59 | சுவா46-53 | அ-46-சித் | பிரயாணம் விவசாயம் |
| 14 | 27 | ஞா | சவு42-1 | விசா48-39 | உத்-மர | ............... |
| 15 | 28 | தி | பஞ்43-9 | அனு51-25 | சித்-60 | பூமி திருத்தம் |
| 16 | 29 | செ | சவ்ஷ45-5 | கேட்55-49 | உ-55-அ | கொடிகள் நட |
| 17 | 30 | பு | சப்49-40 | மூல60-0 | மர-60 | ............... |
| 18 | 31 | வி | அஷ்54-8 | மூல1-15 | சித்-60 | 20-நெ. பூராடத்தின்படி |
| 19 | 1921௵ ஏப்ரல்௴<br>1 | வெ | நவ59-16 | பூரா7-14 | பிர-7-சித் | ருதுசாந்தி |
| 20 | 2 | ச | தச60-0 | உத்13-47 | சித்-அ-60 | ஜீவாந்தரப் பிரயாணம் |
| 21 | 3 | ஞா | தச4-41 | திரு20-16 | அ-20-மர | சீமந்தம், பும்ஸவனம் |
| 22 | 4 | தி | ஏகா9-40 | அவி26-29 | சித்-60 | வாசக்கால் தூண் நட |
| 23 | 5 | செ | து13-51 | சத31-51 | மர-60 | |
| 24 | 6 | பு | திர17-7 | பூட்36-19 | அ-சித்-60 | |
| 25 | 7 | வி | சது19-16 | உட்39-38 | சித்-60 | |
| 26 | 8 | வெ | ● 20-12 | ரேவ41-42 | அ-சித்-60 | |
| 27 | 9 | ச | ரபி19-46 | அசு42-29 | சித்-60 | |
| 28 | 10 | ஞா | து16-31 | பர39-43 | சித்-60 | |
| 29 | 11 | தி | திரு13-24 | கிரு·※·37-58 | சித்-60 | |
| 30 | 12 | செ | சது9-22 | ரோக35-24 | அமி-60 | |
| 31 | 13 | பு | பஞ்4-37 | மிரு3-28 | சித்-4-பிர | |

| | | | |
|---|---|---|---|
| சூரி | கே ச<br>சு செ | | |
| புத | 4-மே-செ<br>26-மீ-புத | | |
| | | | குரு |
| | | ராகு | சனீ |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS,
15, VENKATESA MAISTRY STREET, MADRAS.